


# ரெக்ஸ்

# தரம் ஊரறிந்த உன்னதம்!

## இப்போது மற்றும் ஒரு கவர்ச்சி- அதன் விலை நயம்

எங்கள் ஸ்க்வாஷ்கள் மிகமிக நேர்த்தியான பழங்களாகப் பார்த்துப் பறித்து அவற்றிலிருந்து தயாரிக்கப் பட்டவை. பிறகு தூய சீனிப்பாகும் விசேஷமான இதர சரக்குகளும் சேர்க்கப் பட்டவை. எனவே சுவைத்தறியாத புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது —ரெக்ஸ்.






கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1.

Bensons/1911/TM

திடீரென்று உங்களை
புதுமைப் பெண்ணாகச்
செய்யும் கோயா

கோயா வழங்கும் பனித்துளிக்கு நிகராக
மழமழவென்று அரைத்து சுகந்தம்
ஊட்டப்பெற்ற பௌடர்கள். உங்கள்
பெண்மையைப் புகழும்படியான பரிமள
சுகந்தமும், அழகிற்கு அழகு தரும் அற்புத
குணமும் உள்ள பௌடர்கள்.

மனோகரமான பிளாக்ரோஸ், புதிய
சிருங்கார சாதனம் லவ் அஃபேர், புது
மலரின் மணமுள்ள கார்டீனியா,
பரவசமூட்டும் பாஸ்போர்ட்.
இவையெல்லாம் உங்களை நாள் முழுவதும்
குளுமையுடன் புத்துணர்ச்சி பெறச்
செய்கின்றன.

இந்த நறுமணப் பௌடர்களைத்
தயாரிப்போர்:

**கோயா**



பாரிஸ் . லண்டன் . நியூயார்க்



அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

AGC-9 TAM

# கல்கி

## பொருளடக்கம்

சௌமிய, சித்திரை 29உ ❊ 1969, மேமீ 11உ


| | | |
|---|---|---|
| எதிர்பாராத துயரம் ... | தலையங்கம் ... | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் ... | ... | 6 |
| ஏழைமையிலும் செல்வர் ... | ரா. கணபதி ... | 9 |
| முல்லைவாயில் மில்லர் ... | பாணன் ... | 14 |
| பொன்னியின் செல்வன் ... | அமரர் கல்கி ... | 18 |
| ராமாயணம் ... | ராஜாஜி ... | 30 |
| ஞான ஒளி ... | கே. சுந்தரம் ... | 33 |
| அம்புலிக்கு அப்பால் ... | புஷ்பா — விஜயா ... | 38 |
| தாபம் தீர்க்கும் திருக்குளம் ... | ரா. வி. ... | 40 |
| தீராத விளையாட்டு ... | கு. அழகிரிசாமி ... | 45 |
| 'என் அருமை நைட்டிங்கேல்' ... | விஜயா பாலகிருஷ்ணன் ... | 56 |
| படாதிபதிகளே கேளுங்கள் ! ... | நாடோடி ... | 71 |
| பாசம் பத்தும் செய்யும் ... | கே. ஜெயலக்ஷ்மி ... | 74 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்!

மலர் 28 ● இதழ் 41



# எதிர்பாராத துயரம்

நாம் நமது அருமை ராஷ்டிர பதியை இழந்து விட்டோம்.

பண்பும் பரிவும் மிக்க ஒரு மகா புருஷனை இழந்து விட்டோம்.

ஹிந்து — முஸ்லிம் — கிறிஸ்தவர் என்ற சமய பேதமின்றிக் கோடானு கோடி பாரத மக்கள் உள்ளத்தில் ஓர் இனிய இடம் பெற்றிருந்த டாக்டர் ஜாகிர் ஹுஸைன் மறைந்துவிட்டார். அந்த இடம் சூன்யமடைந்து விட்டது.

இவர் மறைவைப் பற்றிக் கேள்விப் பட்டவுடன் ராஜாஜி சொன்னது இது தான்:

''காலஞ்சென்ற நமது ராஷ்டிரபதிக்குத் தேச மக்களுடன் நானும் எனது வணக்கத்தையும் அவர் தேச சேவையில் ஈடுபட்டிருந்ததற்காக நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவில் அவரைவிடச் சிறந்த பிரஜை வேறு ஒருவர் இல்லை. காந்தி மகானின் சுதந்திரப் போராட்டத்துக்கு அலி சகோதரர்கள் முதன் முதலில் தேடித் தந்த வீரர் டாக்டர் ஜாகிர் ஹுஸைன்.

''நம் தேசத்தில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பெருந் தூணாக விளங்கியவர் மறைந்து விட்டார். நாட்டுக்கு ஏற்பட்டுள்ள துரதிர்ஷ்டங்களுடன் இதனையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.'' இப்படி உள்ளங் கலங்கிக் கூறினார். இதற்கு மேல் இந்தப் பெரிய விபத்தைப் பற்றி வேறு என்ன எழுத முடியும்?

டாக்டர் ஜாகிர் ஹுஸைன் காந்தி மகான் தொடங்கிய முதல் ஒத்துழையாமை இயக்கத்திலேயே பங்கு கொண்டார். அதற்குப் பின்னும் அவர் பல சுதந்திரப் போராட்டங்களில் கலந்து கொண்டார். எனினும் அவரை அறிந்தவர்கள் அனைவரும் அவர் ஒரு பெரிய அறிஞர், நிறைகுடம் என்றே மதித்து வந்திருக்கிறார்கள்.

ஜாகிர் ஹுஸைன் இளமையில் அலிகார் சர்வகலாசாலையில் படிப்பைமுடித்தவுடன், ஜெர்மனியில் பெர்லின் சர்வ கலாசாலைக்குச் சென்று பயின்றார்.

இந்தியாவுக்குத் திரும்பிய பின், தில்லியில் ஜமியா மிலியா இஸ்லாமியா என்ற முஸ்லிம் கல்வி ஸ்தாபனத்தைச் சிறப்பாக நடத்தினார். பின்னர் அலிகார் சர்வ கலாசாலையிலும் உப அத்யட்சகராகப் பணியாற்றி நாட்டிலுள்ள கல்வியாளர்களிடையே பெரு மதிப்பைச் சம்பாதித்துக் கொண்டார்.

நாட்டில் நிலவி வந்த கல்வி முறை அடியிலிருந்து மாற்றப்பட வேண்டும் என்று காந்தி மகான் சொல்லி வந்தார். அதனை முதன் முதல் ஒத்துக் கொண்டவர் ஜாகிர் ஹுஸைன்.

பாரதம் சுதந்திரம் அடைந்த பின் காந்தி மகான் வகுத்துத் தந்த கல்வித் திட்டம் சரியாக நிறைவேற்றப்படவில்லை என்று வருத்தப்பட்டவர்களில் ஒருவர் ஜாகிர் ஹுஸைன்.

சுதந்திர பாரதத்தில் அவர் பீகார் கவர்னராகவும், சர்வகலாசாலை நிதிக் கமிஷன் அங்கத்தினராகவும், பத்திரிகைக் கமிஷன் அங்கத்தினராகவும், உப—ஜனாதிபதியாகவும் பல்வேறு உயர் பதவிகள் வகித்தார். அவர் கல்வித் தொண்டு, மற்ற தொண்டுகளைக் கருதி பத்ம விபூஷண், பாரத ரத்ன முதலிய விருதுகள் வழங்கப்பட்டன. 1967ல் நாட்டின் மிக உயரிய பதவியான ராஷ்டிரபதி பதவியும் அடைந்தார். அவர் எப்பதவி வகித்தாலும் மிக அடக்கமாகவும் கண்யமாகவும் நடந்து கொண்டு வந்தார். கீதையில் கூறியுள்ளபடி 'ஸ்தித பிரக்ஞ'னாக இருந்து மக்களுக்கு வழிகாட்டினார்.

மரணம் எப்பொழுதுமே யாரையுமே வந்தடையும்.

தேசத்தில் பண ஆசைகளையும் மற்ற ஆசைகளையும் நிறுத்திக் கொண்டு ஆண்டவன் பெரியோர்கள் வாய்வழி நியமித்திருக்கும் வழியில் நடப்போமாக.

இந்தக் கடமையை நினைவூட்டவே திடீரென்று ராஷ்டிரபதி மறைந்து விட்டார்.

# ஃபரீதாபாத் பரிதாபம்!

சமீபத்தில் ஃபரீதாபாத்தில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டுப் பந்தலில் ஏற்பட்ட தீவிபத்து துரதிருஷ்டவசமானது என்பதில் ஆட்சேபமில்லை. ஆனால் அதனிலும் துரதிருஷ்டமான விபத்து மேற்படி மகாநாடே எனலாம். தேசம் நாச நிலையின் விளிம்பில் உள்ளது என்ற அவசர உணர்வை ஆளும் கட்சி இன்னமும் பெறவில்லை; நாட்டைப் பாழ்படுத்திய கொள்கைகளைக் கைவிட்டு, புதிய மாற்று வழியைப் பின்பற்ற வேண்டும் என்ற எண்ணம் ஆளும் கட்சியினருக்கு இம்மியும் உண்டாகவில்லை.

இம் மகாநாட்டில் மாறுபட்ட பல குரல்கள் எழுந்திருக்கின்றன. காங்கிரஸ் அக்கிராசனர் சர்க்கார் தொழில்களில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டினால் அதைப் பிரதமர் நாசூக்காக ஆட்சேபிக்கிறார். மொழிவாரி ராஜ்ய அமைப்புக்குப் பதில் பொருளாதார ரீதியில் ஓர் அமைப்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் என்று அக்கிராசனர் கூறினால் உள்துறை மந்திரி ஆட்சேபிக்கிறார். காங்கிரஸ் **நிதானமாக** நாட்டை நாசம் செய்வதைப் பொறுக்க முடியாமல், விரைவிலேயே நாசம் விளைவிக்க அக்கட்சியின் இளரத்தம் துடிக்கிறது. ஒரே கட்சியில் உள்ளவர்கள் மாற்றுக் கருத்துக்களை எடுத்துச் சொல்வது மிகவும் வரவேற்கத்தக்கதே. ஆனால் காங்கிரஸைப் பொறுத்தமட்டில் இந்த மாற்றுக் கருத்துக்களில் எது நாட்டு நலனுக்கு மிகவும் குந்தகம் விளைவிக்குமோ அதுவே இறுதியில் சர்க்காரின் கொள்கையாகி, காரிய ரூபத்திலும் அமலாகிவிடுகிறது.

ஃபரீதாபாத் காங்கிரஸ் மகாநாடு நடப்புக்களில் 'கட்சி' என்ற கருத்தே பெரிதாக இருக்கிறது. 'தேசம்' என்பது அநேகமாக முற்றிலுமே புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. மகாநாட்டின் இந்த அம்சம்தான் பரிதாபகரமானது.

செல்வத்தின் சம விநியோகத்துக்குத் திட்டம் போடுவதற்கு முன் புதிதாகச் செல்வம் உற்பத்தியாக வழி செய்ய வேண்டும் என்று பிரதமர் வலியுறுத்தி விருப்பது மிகவும் சரி. வர்க்கப் பூசல்களால் புதிய செல்வத்தை உண்டாக்க முடியாது. எல்லாப் பிரிவுகளின் இணக்கமும், ஒத்துழைப்புமே செல்வம் உற்பத்தி செய்ய உபாயம். ஆனால் பிரதமரோ 'புதிய' செல்வம், 'ஏற்கெனவே உள்ள செல்வம்' என்ற வித்தியாசங்களை உண்டாக்கிக் குழப்புகிறார். அதாவது இப்போது நாட்டில் உள்ள செல்வத்தை சோஷலிஸ முறையில் விநியோகம் செய்ய வேண்டுமாம்! பரிதாபம்! இப்பொழுது நாட்டில் உள்ள செல்வம் என்பதே அந்நியக் கடன்தான். இந்தக் 'கடன் செல்வம்' நேரடி — மறைமுக வரிகளாக நாட்டு மக்கள் அனைவருக்கும் விநியோகமாகியுள்ளது. நடுத்தர மக்களும் இந்த விநியோகத்தில் அதிக செல்வம் பெற்றுள்ளனர்; அதாவது அவர்கள் மீது கடன் சுமை அதிகமாக விழுந்துள்ளது!

இன்றைய நெருக்கடியில், தேச நிர்வாகம் குறித்து காங்கிரஸ் தலைமைப் பீடத்தின் ஆலோசனையோ, காங்கிரஸ் பார்லிமெண்டரி பீடத்தின் ஆலோசனையோ உதவாது என்பதைப் பிரதமர் உணர்ந்திருந்தால் எவ்வளவோ சிறப்பாக இருந்திருக்கும். இவற்றுக்குப் பதிலாக, கட்சிப் பற்றற்ற ஒரு குழுவை அமைத்து அதன் ஆலோசனையின் மீது நிர்வாகம் நடத்த உத்தேசித்திருப்பதாகப் பிரதமர் இம்மகாநாட்டில் பிரகடனம் செய்திருந்தால் அவர் பெயர் தேச வரலாற்றில் நிலையாகப் பொறிக்கப்பட்டிருக்கும்.

ஏற்கனவே காங்கிரஸிடம் தேசத்துக்கு நம்பிக்கை குறைந்து விட்டது. ஃபரீதாபாத் மகாநாட்டுக்குப் பிறகு அந்தச் சிறிதளவு நம்பிக்கை மேலும் குறைந்து விட்டது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

அமெரிக்காவின் உத்தமமான புதல்வர்களில் ஒருவர் ஹென்றி டேவிட் தோரோ. காந்திஜி பிறப்பதற்கு ஏழாண்டுகள் முன்பே காலமாகிவிட்ட தோரோதான் சத்தியாக்கிரக முறைக்கு அடிகோலியவர்.

அடிமை வியாபாரத்தை எதிர்த்துத் தம் நாட்டு அரசாங்கத்துக்கே வரி கொடுக்க மறுத்தவர் தோரோ. இதற்காகச் சிறை வைக்கப்பட்டார். அடக்குமுறை அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுப்பதற்கு ஒரு பிரஜைக்கு **உரிமை** உண்டு என்று கூறியது மட்டுமின்றி, இவ்வாறு ஒத்துழைக்க மறுப்பது பிரஜையின் **கடமையும்** ஆகும் என்றவர் தோரோ.

''ஒத்துழையாமை என்ற கடமை'' என்ற தலைப்பில் அவர் எழுதிய நூலில் சத்தியம், அச்சமின்மை, அஹிம்சை இவற்றோடு சத்தியாக்கிரகமும் வலியுறுத்தப்பட்டிருந்ததே காந்திஜியை மிகவும் ஈர்த்திருக்க வேண்டும். 1942ல் அமெரிக்க மக்களுக்கு காந்திஜி விடுத்த பகிரங்கக் கடிதத்தில், ''என்னுடைய ஒத்துழையாமைக்கு விஞ்ஞான ரீதியில் உறுதி தந்தது 'ஒத்துழையாமை என்ற கடமை' என்ற தோரோவின் நூல்தான். தோரோ என்கிற உருவத்தில் எனக்கு நீங்கள் (அமெரிக்க மக்கள்) ஓர் ஆசாரியனைத் தந்திருக்கிறீர்கள்'' என்று கூறியுள்ளார்.

அமெரிக்காவின் புகழ் வாய்ந்த கவியும், தத்துவ ஞானியுமான ரால்ஃப் வால்டோ எமர்ஸன் சிறையிலிருந்த தோரோவை ஒரு முறை சந்தித்து, ''சிறைக்குள் இருந்து கொண்டு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டதாகவும், அதற்கு விடையாக தோரோ, ''சிறைக்கு வெளியே இருந்து கொண்டு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று எமர்ஸனைத் திருப்பிக் கேட்டதாகவும்

அமெரிக்காவில் ஒரு பொருள் பொதிந்த கதை வழங்குகிறது. 'ஒரு பிரஜையை அநியாயமாகக் கைது செய்ய அரசாங்கம் அதிகாரம் பெற்றிருக்குமாகில், அப்படிப் பட்ட நாட்டில் நியாய உணர்வு படைத்த மனிதனுக்குரிய இடம் சிறைதான்' என்றார் தோரோ.

> ''தனி மனிதனின் ஆற்றலிலிருந்துதான் சர்க்காருக்குச் சக்தியும், அதிகாரமும் உண்டாகின்றன. இதை உணர்ந்து, தனி மனிதனைச் சுதந்திரச் சக்தியுடன் வாழ விட்டாலன்றி ஒரு நாடு உண்மையில் சுதந்திரமோ அறிவொளியோ பெற்றதாகாது''

என்பது தோரோவின் ஒரு வாசகம்.

''தோரோவைவிட உண்மையான ஓர் அமெரிக்கர் இருந்ததில்லை. அறிவும், சீலமும், அழகும் உள்ள இடங்கள் யாவும் அவருக்கு இல்லமாகும்'' என்று எமர்ஸன் அவருக்கு மரண அஞ்சலி செலுத்தினார்.

எல்லா அம்சங்களிலும் இவர் காந்திஜிக்கு முன்னோடியாக இருந்தது அதிசயம். ஆனால் அவர் காந்திஜி போல் நாட்டின் முக்கியத் தலைவராகக் கருதப்படவில்லை.

அமர இந்தியாவின் பெருமைக்குக் காரணமான புத்தரும், அசோகரும், அக்பரும், காந்தியும் இன்றைய பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சிக்கு ஒருகாலும் பிரதிநிதிகள் அல்லர். இவ்வாறே அமெரிக்காவின் சிரஞ்சீவி ஆன்மாவுக்கு உருவகமான தோரோ, அந்நாட்டின் இன்றைய டாலர் வேட்கைக்கோ, அணு சக்திக்கோ, பிரதிநிதி அல்ல.

தோரோவின் கட்டுரைகளைப் படித்தால், அவருக்குப்பின் தோன்றிய மேல்நாட்டு அறிஞர்களைவிட ஆழ்ந்த முறையில் அவர் நமது உபநிஷதங்களைப் புரிந்து கொண்டவர் என்பது தெரியும்.

ீீீ

தமிழ் நாட்டில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் படுதோல்வி கண்டுள்ளது. மொத்தம் 73 நகர மன்றங்களுக்கு நடந்த தேர்தலில் காங்கிரஸுக்கு எட்டே மன்றங்கள்தாம் கிடைத்துள்ளன. (இதுவரை பெரும்பாலான நகர மன்றங்கள் காங்கிரஸின் கையில்தான் இருந்தன என்பது குறிப்பிடத் தக்கது.) தி. மு. க.வும் அதன் நேசக் கட்சிகளும் 35 நகர சபைகளில் நிருவாக அதிகாரம் பெற்றுள்ளன. மீதமுள்ள முப்பது மன்றங்களில் எந்தத் தனியொரு கட்சியும் பெரும்பான்மை ஸ்தானம் பெறவில்லை.

ஃபரீதாபாத் காங்கிரஸ் மகாநாட்டில் அக்கட்சிக்குள் நிலவும் பேதங்களும், பிளவுகளும் வெளிப்பட்ட அதே சமயத்தில் தமிழகத்தில் காங்கிரஸுக்கு இந்தப் படுதோல்வி ஏற்பட்டிருப்பது கவனத்துக்குரியது.

ீீீ

விவசாய உற்பத்தியில் இந்தியா ஒருமுகமான கவனம் செலுத்தி அபிவிருத்தி காண வேண்டும் என்று நம் நாட்டுக்குக் கடன் தரும் அந்நிய நாடுகள் கருதுகின்றன. இதையும் பொருட்படுத்தவில்லை ஸ்ரீ மொரார்ஜி தேசாய். ரசாயன உரத்தின் மீது விதித்துள்ள புது வரியை நீக்குவதற்கு மறுக்கிறார். வரி போடுவதால், அவ்வரிக்கு ஆளாகின்ற பொருளின் உற்பத்தியில் ஊக்கம் குறையும் என்பதை ஸ்ரீ மொரார்ஜி புரிந்து கொள்ள வேண்டும்.

நகர மக்களுக்கு உணவு தானியம் கிடைக்கவும், வெளிநாடுகளுக்கு உணவு தானிய ஏற்றுமதி செய்யவும் உதவுபவர்கள் பெரிய பண்ணையார்களே. சிறிய விவசாயிகள் முன்னிருந்த நிலையைவிட நல்ல நிலைக்கு வந்திருந்தால், அதன்பின் அவர்களைப் பாதிக்காமல் விட்டுவிட வேண்டும். நல்ல நிலையில் உள்ளவர்களைக் கண்டு துன்பப்படுவதுதான் சோஷலிஸம் என்று எண்ணக் கூடாது.

(நில வரி என்பது ராஜ்ய சர்க்காரின் ஆணைக்கு உட்பட்டது. சொத்து வரி, மத்திய சர்க்காரின் அதிகாரத்துக்கு உட்பட்டது.) இப்போது ஒரு விந்தையான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நகரங்களில் வீடுகள் கட்டப்பட்டுள்ள மனையின் மீது 'நில வரி' என்கிற பெயரில் ராஜ்ய சர்க்கார்கள் வரி விதிக்கின்றன. இது உண்மையில் சொத்து வரியே. அதே போதில், மத்திய சர்க்காரோ, 'சொத்து வரி' என்கிற பெயரில், விவசாயம் செய்யப்படும் கிராமப்புற நிலங்களின் மீது வரி விதிக்க விரும்புகிறது.

நாட்டின் மக்கள் தொகையில் ஏழைகளும், மத்திய வர்க்கத்தினருமே 90 சதவிகிதம் உள்ளனர். 'எனவே, இவர்களிடமிருந்து வரி மூலமோ, இதர விதத்திலோ வருமானம் பெறாவிடில் சர்க்காரின் செலவுக்கு எப்படி நிதி கிடைக்கும்?' என்று நிதி மந்திரி வினவுகிறார். கணித ரீதியில் அவர் கேட்பது சரிதான். ஆனால் இப்போது செய்ய வேண்டியது சர்க்காரின் **செலவைக் குறைக்க வேண்டியதே** என்பதை அவர் மறந்து பேசுகிறார். செலவைக் குறைத்தால் வரிச் சுமையும் தானே குறைக்கலாம். இதுவே விரும்பத்தக்க மாறுதல்; விரும்பத் தக்கது என்பது மட்டுமின்றி இதுவே இன்று அத்தியாவசியமும் ஆகும்.

சர்க்கார் செலவை எவ்வளவு குறைக்கலாமோ அவ்வளவுக்குக் குறைப்பது என்ற பழைய முறையை மீண்டும் மேற்கொள்ள வேண்டும். செலவைப் பெருக்கிக் கொண்டு, மூலதனத்துக்காக நேரடியாகவும் மறைமுகமாகவும் வரிகளை அதிகரிப்பது உதவாது. சர்க்கார் கடன் பத்திரங்களின் மூலமே மூலதனம் திரட்ட வேண்டும்; வரி மூலம் அல்ல.

ீீீ

ஸ்ரீ பி. நடேசன் அவர்கள் தமது 83வது பிராயத்தில் புது தில்லியில் காலமாகி விட்டார். ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் ஸ்தாபித்த 'இந்தியன் ரிவ்யூ'வில் துணை ஆசிரியராகவும், ஆசிரியராகவும் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் பணிபுரிந்தவர் அவர். ஸ்ரீ பி. நடேசன் கடைசியாக வெளியிட்ட ''வாழ்வு என்ற ஒத்திசை'' (Symphony of Life)க்கு என்னிடம் முகவுரை பெற்றார். காந்திஜியிடம் பக்தி பூண்ட சீடர். மகாத்மாவைக்குறித்துப் பிரசுரமாகாத பல கட்டுரைகளை விட்டுச் செல்கிறார்.

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.






காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல, குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.O.21 TAM

காந்திஜி
விரும்பிய கீதம்

# ஏழைமையில் செல்வர்; செல்வத்தில் எளியவர்

**ரா. கணபதி**



சுதாமா என்று ஓர் அந்தணர். சிறந்த பிரம்ம ஞானி. உலகப் பற்றை அறவே களைந்தவர். புலன்களை அடக்கியவர். கிடைத்ததைக் கொண்டு திருப்தி பெறுபவர். இவ்வளவு நன்மைகளுக்கும் உறைவிடமாக இருந்ததால் பெயருக்கேற்ப அவர் சு — தாமாவாகவே இருந்தார்.

ஆனாலும் இப்படிப்பட்ட உத்தமர்கள் இந்த உலகில் போற்றுதலும் செல்வாக்கும் பெறுவதில்லை, அல்லவா? சுதாமா ஒரு பரம ஏழைப் பிராமணராகக் காலம் கடத்தி வந்தார். சுதாமா என்ற பெயரே போய், குசேலர் (கந்தல் துணி உடுத்துபவர்) என்றே உலகம் அவரை அழைத்தது.

சுதாமாவாகிய குசேலரின் இல்லாள் க்ஷுத்க்ஷாமா — பொருள் எதுவுமே இல்லாததால் 'இல்லாளா'கவே இருந்தாள் அவள். ஒழுக்கத்திலும் மன அடக்கத்திலும் பதியை நிகர்த்த பத்தினி அவள்.

மிகுந்த பொறுமையுடன் ஏழைமையைத் தாங்கி வந்த க்ஷுத்க்ஷாமாவாலும் சகிக்க முடியாத வறுமை நிலை ஏற்பட்டது.

பதியிடம் சென்று மிகவும் வெட்கத்துடன், வெட்கத்தால் ஏற்பட்ட நடுக்கத்துடன் சொன்னாள்: ''பிரபுவே! லக்ஷ்மிபதியான

ஸ்ரீ கிருஷ்ணனுடன் தாங்கள் குருகுலவாசம் செய்தவராமே! உத்தமர்களுக்கு சரண்யனாக விளங்கும் கிருஷ்ண பரமாத்மா துவாரகாதீசனாக விளங்கி வருகிறான். அவனை அடைந்து நமது தரித்திரம் நீர வழி காணலாகாதா?''

நாதனின் உயர்ந்த உள்ளத்தை அறிந்த க்ஷுத்க்ஷாமா நாணத்துடனேயே இந்த யோசனையை வெளியிட்டாள்.

அவள் அவ்விதம் கூறியது சுதாமாவுக்கு வியப்பாகவே இருந்தது. அநித்தியமான பொருளை யாசிப்பதற்காக நித்தியனிடம் செல்வது அவருக்கு அவமானமாக இருந்தது.

ராஜாதிராஜனாக விளங்கும் கண்ணனின் முன் ஏழையாகிய தாம் சென்று நிற்கலாகாது என்ற எண்ணத்தின் மீதே இத்தனை காலமாகக் குருகுலத் தோழனைக் காணாதிருந்தார் அவர். இப்போது மனைவி சொன்னதின் பேரில் ஐயனைத் தரிசனம் செய்கிற ஆவல் பொங்கி எழுந்தது.

'யாசக விஷயம் எப்படியோ போகட்டும். இக்கண் படைத்த பயனாக, கண்ணனை — உத்தம சுலோகனை — தரிசனம் செய்ய வேண்டாமா?' என்ற அவா பீறிக் கொண்டு எழுந்தது.

மனைவியை நோக்கி, ''கல்யாணி! கண்ணனைக் காணச் செல்கிறேன். அவனுக்குக் காணிக்கை செலுத்தக் கையுறை ஏதேனும் தருவாய்'' என்றார்.

அவள் அவரை யாசகத்துக்கு அனுப்புகிறாள்! இவரோ யாசகம் அளிக்க வேண்டிய பிரபுவுக்குக் கையுறை கேட்கிறார்!

வீட்டில் காணிக்கை செலுத்த எப்பொருளும் கிடையாது. கணவர் பிரியமாகப் பாலியத் தோழனுக்கு என்று கேட்கும்போது 'எதுவுமே இல்லை' என்று சொல்ல க்ஷுத்க்ஷாமா வெட்கினாள்.

அவருக்குத் தெரியாமல் நாலு வீட்டில் யாசித்து நாலு பிடி அவல் வாங்கி வந்தாள். யாசகம் செய்வது பதியின் பொறுப்பு; பத்தினியுடையதல்ல. மகானை யாசகத்துக்கு அனுப்புவதற்குப் பிராயச்சித்தமாக முதலில் மனைவியே பிச்சை எடுத்து விட்டாள். ஒருவேளை பகவான் அவலை உண்டு செய்கிற அருள் தங்களுக்கு மட்டும் கிடைக்காமல் இன்னும் நாலு வீட்டுக்குக் கிடைக்கட்டும் என்று எண்ணினாளோ என்னவோ!

ஃ ஃ ஃ

பெரும் பாடு பட்டுக் கந்தல் துணியில் அவலைச் சிந்தாமல் முடிந்து கொண்டு, சிந்தாகுலமாகத் துவாரகாபுரி சென்றார் சுதாமா. 'இந்த ஏழைக்கு ராஜாதிராஜனின் தரிசனம் எப்படிக் கிடைக்கும்?' என்பதே அவரது சிந்தை.

ருக்மிணி தேவியுடன் மஞ்சத்தில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்த பகவான், சுதாமா எட்டத்தில் வரும்போதே பார்த்து விட்டான். அவன் பார்வைக்குப் படாத விஷயமும் உண்டா?

மஞ்சத்திலிருந்து அப்படியே குதித்து விரைவுடன் ஓடிச் சென்று சுதாமாவை வழியிலேயே எதிர்கொண்டு வரவேற்றுவிட்டான் வாசுதேவன்.

தனது கோமள சாமளத் திருக் கரங்களால் ஏழைப் பிராமணரை ஆரத் தழுவிக் கொண்டான்.

அந்த அன்பில் சுதாமாவின் கண்கள் கரைந்து வழிந்தன. கரையற்ற அன்பு கொண்ட கண்ணனும் ஆனந்தக் கண்ணீர் சிந்தினான்.

சுதாமா ஏழை. ஆனால் அவரது உள்ளம் என்கிற பொன்னுக்கு யார் விலை மதிப்பிட முடியும்? ஏழைமையையே உணராத அந்த லக்ஷ்மீகரமான திரு உள்ளத்தை லக்ஷ்மி நாயகன் வியந்து போற்றினான்.

சுதாமாவைத் தனது மஞ்சத்திலேயே அமர்த்தினான் கண்ணன். அவரது பாதங்களைக் கழுவி அந்த நீரைத் தன் சிரசில் தெளித்துக் கொண்டான். சுதாமாவின் நரம்பு புடைத்த வற்றிய உடலில் திவ்விய சந்தனத்தைத் தனது மணக்கும் திருக்கரங்களாலேயே பூசினான்.

வெயிலில் வந்தவருக்குச் சந்தனத்தின் தண்மை முற்றும் தெரியுமாறு ருக்மிணி தேவியே சாமரம் வீசி உபசரித்தாள்.

சுதாமா எளியவர்தான். ஆனால் அந்த எளிமைக்கு அடிபணிந்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் எளிமையை, தேவி ருக்மிணியின் எளிமையை என்னென்பது?

பகவான் செய்கிற பணிவிடைகளைப் பார்த்து அந்தப்புரப் பெண்களுக்கு ஆச்சரியமாகி விட்டது. தேவகியும், வசுதேவரும் பலராமரும், உத்தவரும் பெறாத உபசரனை அல்லவா இந்த ஏழைப் பிராமணனுக்குக் கிடைக்கிறது என்று அதிசயித்தனர்.

ஃ ஃ ஃ

பகவான் குழந்தை உள்ளத்துடன், பாலியப் பருவத் தோழமையை நினைவு கூர்ந்து பேசிக் கொண்டிருந்தான்.

''சுதாமா! ஒரு முறை நமது குரு ஸாந்திபனி முனிவரின் பத்தினி நம்மை விறகு வெட்டி வருமாறு பணித்தாளே, நினைவிருக்கிறதா? நாம் பெரிய காட்டினுள் சென்றோம். திடுமெனப் பேய்க்காற்றும் பெரு மழையும் தொடங்கின. அன்று இடித்த இடி இன்றும் மறக்கவில்லை.

''மழை நீண்ட நேரம் நிற்கவே யில்லை. சூரியனும் அஸ்தமித்து, அந்தகாரமாகி விட்டது. திசைகளை யெல்லாம் இருட்டு அப்படியே திருட்டுச் செய்து விட்டாற் போலிருந்ததல்லவா? நமக்குப் பள்ளம் மேடு தெரியவில்லை. எங்கும் இருட்டு. எங்கும் ஜலமயம். அப்போது எனக்கு நீங்கள் துணை; உங்களுக்கு நான் துணை. நாம் பரஸ்பரம் கையை இறுகப் பிடித்துக் கொண்டு சுற்றினோமே ஞாபகம் இருக்கிறதல்லவா?

''இங்கே நாம் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கும்போது, அங்கே குருவும், குரு பத்தினியும் நம்மைக் காணாமல் ஒரேயடியாகக் கவலைப்பட்டிருக்கிறார்கள். அந்த மழை இருட்டில் ஸாந்திபனி முனிவர் நம்மைத் தேடிக் கிளம்பி விட்டார்.

''சூரியன் பனிச்சென்று உதயமானான். குருவும் நம்மைக் கண்டார். மனமெல்லாம் சூரியோதயமாக ஆயிற்று. அன்றைக்கு குரு நமக்கு எப்படி வாயார ஆசி கூறினார்? நினைவு இருக்கிறதல்லவா?''

கண்ணன் களங்கமே இல்லாமல் உற்சாகமாகப் பழைய கதைகளைப் பேசிக்கொண்டு போனான். தான் பகவான், துவாரகாதீசன்—சுதாமா ஓர் ஏழை அந்தணன் என்ற எண்ணம் அவனுக்கு லவலேசமும் இல்லை. மநுஷ்ய தர்மத்தை வெகு அழகாகச் செய்து காட்டினான் ஐயன்.

கடலிலேயே துயிலும் கருநிறப் பெருமான் மழையையும் இருட்டையும் கண்டு பயந்தானுமே! அப்போது உலகுக்கு எல்லாம் ஆதாரமான அவனுக்கு சுதாமா துணையாக இருந்தாராமே!

பெருமையை விலக்கி வாழ்வதில் அவனுக்கு நிகரில்லை. குரு பத்தினிக்காக விறகு வெட்டி வந்திருக்கிறான்! பிறிதொரு முறை அவன் மழை இருட்டில் தவித்தபோது, பெண் பிள்ளையான ராதை அவனுக்குத் துணையாகி மீட்டு வந்ததை ஜயதேவர் சொல்கிறார்.

சுதாமாவுக்குச் சூழ்நிலை எதையும் தராமல் ஒதுக்கி வைத்தது. கண்ணனோ சகல சம்பத்தும், தெய்விக ஆற்றல்களும் பெற்றிருந்தும் அவற்றிலிருந்து ஒதுங்கி வாழ்ந்தான்.

ஒதுங்கிய இருவர் நெருங்கிய அழகே கிருஷ்ண — குசேல சந்திப்பு.

ஃ ஃ ஃ

குசேலரைப் பாங்காகக் குசலப் பிரச்னம் செய்கிறான் கண்ணன்: ''வித்யாப்யாசத்துக்குப் பிறகு நமக்குத் தொடர்பே இல்லாமல் போய் விட்டது. கல்வியை முடித்து ஸமாவர்த்தனம் செய்து கொண்டு ஊருக்குத் திரும்பினீர்களே, பிறகு எப்போது கலியாணம் ஆயிற்று? உங்கள் தங்கமான உள்ளத்துக்குத் தகுந்தாற்போல் மனைவி கிடைத்தாள் அல்லவா?''

அன்பு வெள்ளத்தில் சிக்குண்ட குசேலருக்குப் பதில் பேசவா வரும்?

குசேலருடன் இடைக் காலத்தில் தொடர்பு விட்டுப் போனதாகச் சொன்னானே, அது உண்மையா? அவனுடைய தொடர்பு இல்லாமல் அணுவும் அசையுமா?

குசேலரின் வாழ்க்கை முழுவதையும் உள்ளங்கை நெல்லிக் கனியாகப் பார்த்துக் கண்ணனே தொடர்ந்து பேசினான்: ''ஞானியே! உங்கள் மனத்தை ஆசை தொடாது. உங்களுக்கு இல்லற வாழ்வில் பற்று இல்லை; பொருள் சம்பாதிப்பதில் பற்று இல்லை.''

சடேரென்று ஓர் உற்சாக மிருதியால் எளிய கண்ணன் பெரிய பகவானாகி ''மாயை தீண்டாமல், உலக நன்மைக்காகவே நான் கருமம் செய்வது போல் அல்லவா நீங்களும் செய்து வருகிறீர்கள்?'' என்றான்.

''நாம் இருவரும் குருகுலவாசம் என்ற உத்தமமான காலத்தில் ஒன்றாக வாழ்ந்ததில் மிகவும் மகிழ்ச்சி காண்கிறேன். குருவுக்குப் பணிவிடை செய்த காலத்துக்கு ஒப்பாக எது உண்டு? குருவுக்குச் செய்யும் சுசுரூஷையால் நான் மகிழ்வது போல் பிரமச்சாரியின் புலனடக்கத்தாலோ, கிருஹஸ்தனின் யாகத்தாலோ, வானப்பிரஸ்தனின் தவத்தாலோ, சந்நியாசியின் சமாதி நிலையாலோ கூட மகிழ்வதில்லை.''

பேசியது அவ்வளவும் கண்ணன்தான். குசேலர் வாக்கே வராமல் அமர்ந்து விட்டார்.

''என்ன அண்ணா, ஏதும் பேசமாட்டேன் என்கிறீர்கள்? அதுதான் போகட்டும். தொலை தூரத்திலிருந்து நீண்ட காலத்துக்குப் பின் தம்பியைப் பார்க்க வந்திருக்கிறீர்களே, எனக்கு மதனி ஏதுமே கொடுத்தனுப்பவில்லையா?'' என்று புன்முறுவலுடன் வினவினான் பரமாத்மன்.

'தூய அந்தகரணத்துடன் ஒரு பச்சிலை, அல்லது பூ, அல்லது பழம், அல்லது ஒரு சொட்டு நீர் தந்தால் கூட அதை அன்புடன் ஏற்றுக் கொள்கிறேன்' என்று அர்ஜுனனிடம் இதே பகவான் சொன்னது குசேலரின் செவிகளில் ஒலித்தது.

ஆயினும் சுகுமார கிருஷ்ணனுக்கு வறட்டு அவலை எடுத்துத் தர அவருக்கு மனம் வரவில்லை.

கண்ணன் விடுவானா? க்ஷுத்க்ஷாமா பிச்சை எடுத்துத் திரட்டி அனுப்பி வைத்த புனித நிவேதனத்தை உண்டு, அவனுக்குச் செல்வ மழை பொழிந்தே தீருவது என்று தீர்மானித்து விட்டான்.

எனவே, ''அண்ணா, அதென்ன துணியில் முடிச்சு? எனக்குத்தான் ஏதோ தின்பண்டம்'' என்று கூறிக் கொண்டு தானாகவே சுதாமாவின் கந்தையில் முடிந்த அவலைப் பிரித்தான். ஒரு பிடியை எடுத்து மூவுலகும் காட்டும் தன் திருவாயில் போட்டுக் கொண்டான்.

அவன் அவலை உண்ணும் ஆவலைக் கண்டு ருக்மிணி தேவி பயந்து போய்விட்டாள். இப்படிப்பட்ட அநுக்கிரக வெறியோடு அவன் இன்னொரு பிடி உண்டால், அப்புறம் தானே சுதாமாவின் மனைவிக்கு வேலைக்காரியாகி விட வேண்டியிருக்கும் என்று அச்சம் கொண்டாள் லக்ஷ்மியாகிய ருக்மிணி. இரண்டாம் பிடி உண்ணவொட்டாமல் கண்ணன் கரத்தைப் பிடித்துக் கொண்டு விட்டாள்.

ஃ ஃ ஃ

கண்ணன் வறட்டு அவல் தின்ற பின் குசேலருக்கு அமர்க்களமாக விருந்து நடத்தினான்.

குசேலரின் இருதயத்துக்கு நடந்த விருந்தை யாரே வருணிக்க முடியும்?

அரண்மனையில் ராஜபோகமான சயனமும் ஏழைக் குசேலருக்கு அளிக்கப்பட்டது.

பொழுது விடிந்தது.

குசேலருக்குத்தான் அது எப்படிப்பட்ட விடிவு காலம்?

தம் பாதத்தில் பரம சீதளமாக, மிருதுவாக ஏதோ ஒன்று கவ்வுகிற திவ்விய அநுப

வத்தில் திடுமென விழித்துக் கொண்டார் குசேலர்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவரது பாதத்தைப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொள்கிறான்!

அந்த உபசாரணையை அதற்கு மேல் தாங்கக் குசேலருக்குத் திராணி இல்லை.

ஊருக்குப் புறப்பட்டார்.

ஐயன் கண்ணன் நீண்ட தூரம் தொடர்ந்து வந்து வழி அனுப்பி வைத்தான்.

குசேலரும் அவனிடம் திரவியம் கேட்கவில்லை; அவனும் — அந்த மாயக் குறும்பனும் — அவரிடம் திரவியம் பற்றி ஒரு வார்த்தை பேசவில்லை.

வீடு திரும்புகையில் சுதாமாவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது — மனைவி முன் எப்படி வெறும் கையோடு நிற்போம் என்று அல்ல; இத்தனை நாட்களாகக் காணாத கண்ணனை, கடைசியில் இதயத்தில் அடி ஆழத்தில் அணு அளவேனும் பொருளாசையை ஒரு லட்சியமாகக் கருதி அல்லவோ சென்று பார்த்து வந்தோம் என்றே வெட்கினார்.

தமக்குக் கிட்டிய பேற்றினை மீள மீள நினைவு கொண்டு வெட்கத்தைப் போக்கிக் கொண்டார். 'செந்திருவும் ஸ்ரீ வத்ஸ மறுவும் மருவும் திருமார்பு பொருந்த என்னைத் தழுவினானே அப்பன்! இந்த அஷ்ட தரித்திரன் எங்கே, அந்த அஷ்ட லக்ஷ்மி நாயகன் எங்கே? தேவி ருக்மிணியை இறக்கி என்னை மஞ்சத்தில் அமர்த்தினானே! அந்தத் தேவியைக் கொண்டே எனக்கு விசிறினானே! அப்படிப்பட்டவன் எனக்கு ஐசுவரியம் தந்து அனுப்பவில்லையென்றால் அதுவே அநுக்கிரகம்தானே. ஆம், வறுமையில் நான் எளியவனாக இருந்தேன். அவனை மறவாமல் பக்தி புரிந்தேன். செல்வச் செழிப்பு ஏற்பட்டால் எனக்குப் பணத் திமிர் ஏற்படக் கூடும். பக்தி பழுதுறக் கூடும். ஆகா, ஐயன் என்னை அந்தக் கொடிய கதிக்கு ஆளாக்காமல் இருந்தானே! என்ன கருணை, என்ன கருணை!' என்று வியந்து கொண்டே தமது ஊரை அடைந்து வீட்டை நெருங்கினார்.

என்ன விந்தை! வீடு காணப்படவில்லை.

'வீடு எப்படி மறைந்து போகும்? தமக்குத் திக்பிரமம் ஏற்பட்டு விட்டதா என்ன?' என்று கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தார்.

சந்தேகமே இல்லை. அவரது பொத்தல் குடிசையைக் காணோம்.

அது காணாமற் போனதை விடப் பெரிய அதிசயமாக அந்தக் குடிசை இருந்த இடத்திலேயே தகதகவென்று ஒளி வீசும் அடுக்கு மாளிகை நிற்கிறது!

இந்த விந்தையை அவர் வியந்து கொண்டு நிற்கையிலேயே அவ்வீட்டினின்றும் வாத்திய கோஷத்துடனும் திவ்விய இசையுடனும் ஏராளமான பணியாட்கள் வெளி வந்து அவரைப் பணிந்து வரவேற்றனர்.

ஸ்ரீ தேவியேபோல் சர்வாலங்கிருத சோபையுடன் திகழும் க்ஷுத்க்ஷாமா — அந்தப் பெயரே இனி அவளுக்குப் பொருந்தாது — அந்த வீட்டிலிருந்து எஜமானி அம்மாள் ஸ்தானத்தில் வெளி வந்தாள்.

கணவரைக் கண்டதும் சர்வாலங்காரங்களையும் விட சுந்தரமான அன்பின் மிகுதியில் அவளுக்கு ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. துவாரகாநாதனைக் கண்டு அவனருளால் இங்கு எட்டடுக்கு மாளிகையும், ஏவலாளர் படையும் கூட்டி வைத்துவிட்டு இன்னமும் தாம் மட்டும் கந்தலுடனேயே வந்து நிற்கும் பதியைக் கண்டு செயலிழந்தாள். செயலிழந்தாலும் அவளது புத்தி அவரை வணங்கியது; மனம் அவரை அணைத்துக் கொண்டது என்கிறார் ஸ்ரீமத் பாகவத கவி.

மாளிகையில் பிரவேசித்தார் சுதாமா. சுதாமா என்றாலே 'நல்ல இருப்பிடத்தை உடையவர்' என்றும் பொருள் படும்.

ஆனால் அவரோ இது நல்ல இருப்பிடம் தானா என்று ஆலோசித்தார்.

''நான் விக்ஞாபனம் செய்து கொள்ளாமலே முகில் வண்ணன் இங்கு திரவிய மழை பொழிந்திருக்கிறான். அற்பமான அவலை அற்புதப் பொருளாக ஏற்றான்; அதே சமயத்தில் இங்கு அவன் செய்த அற்புதத்தையோ அற்பமாக எண்ணி என்னிடம் சொல்லக்கூட இல்லை. 'மாயைப் பற்று நீங்கி உலகுக்காகக் காரியம் புரியும் என்னைப் போன்றவனே நீ' என்றானே! இப்போது நானும் மெய்யாக அவனைப் போலவே இந்த அற்புதச் செல்வச் செழிப்பை அற்பமாகத்தான் எண்ண வேண்டும். இத்தனை காலம் பக்திச் செல்வத்தைத் தந்தவன் இப்போது பணச் செல்வத்தைத் தந்து சோதனை செய்கிறான் என்று புரிந்து கொண்டேன். மாதவா, உன் கிருபையால் சோதனையில் தேறுவேன். செல்வச் செழிப்பிலும் எப்படி விநய மூர்த்தமாக இருக்க வேண்டும் என்பதை நீயே செய்து காட்டி விட்டாய். உன்னை அவ்வாறே நானும் பின்பற்ற அருள் புரிவாய்'' என்று வேண்டிக் கொண்டார் குசேலர்.

இன்னமும் அவர் கந்தலாடைக் குசேலர் தான். அப்படிப்பட்டவர்கள்தான் எம்பெருமானுக்கு ஆப்தர்கள்.

செல்வத்தால் செருக்குறாமல் வாழ்ந்தனர் சுதாமா தம்பதியர்.

பக்தி நன்றாகக் கனிந்தது. செல்வம் தம்முடையது என்ற எண்ணமே இற்று வீழ்ந்து விட்டது.

மண்ணும் பொன்னும் ஒன்றாகத்தான் தெரிந்தன.

முன்பு எளிமையிலும் செல்வ நிறைவைக் கண்ட சுதாமா இப்போது செல்வ நிறைவிலும் எளிமையே கண்டார்.

வறுமையும் பெருமையும் அவருக்கு ஒன்றாகவே இருந்தன.

விஷய சுகங்களை அறவே நீக்கி, இறுதியில் கர்மக் கட்டிலிருந்து விடுபட்டுப் பரமபதம் அடைந்தார்.

ஏழைமையில் மாதவ மயமாக வாழ்ந்து, ஐசுவரியத்தையும் அவனுடையதாகவே கண்ட சுதாமாவை 'சம திருஷ்டி' என்ற வைணவப் பாங்குக்கு ரூபகமாகத் தீட்டியிருக்கிறார் ஓவியர் கனு தேசாய்!

'ஸ்டியரிங்' பிடித்தவர்களெல்லாம் 'டிரைவர்' ஆகிவிட முடியுமா? அப்படித்தான் புகைப்படக் கலையும்! விலையுயர்ந்த காமிரா மட்டும் இருந்தால் நல்ல புகைப்படங்கள் எடுத்து விட முடியாது; புகைப்படக் கலையின் நுணுக்கங்களையெல்லாம் அறிந்தவர்களால்தான் இத்துறையில் சிறப்பெய்த முடியும். புகைப்படக்காரர் கலை உள்ளம் படைத்தவராக இருத்தல் வேண்டும். எங்கே கலையழகு மிளிர்கிறது என்று கலைக் கண் கொண்டு ஆராய்ந்து பார்த்துப் பிடிக்கப் பெறும் புகைப்படங்கள் பார்ப்போரின் கண்களுக்கும் மட்டும் விருந்தாக அமையாமல், உள்ளத்



# முல்லைவாயில் மில்லர்



தையும் தொடுவனவாக இருக்கும். ஹாரி மில்லர் பிரிட்டிஷ் கௌன்சிலில் அமைத்திருந்த புகைப்படக் காட்சியில் சில அற்புதமான படங்கள் இந்த உண்மைக்கு எடுத்துக் காட்டாக விளங்கின.

பம்பாய் எலிபெண்டா குகையிலுள்ள திருமூர்த்தி சிலையின் வலது பக்க முகத்தை எவ்வளவு நேர்த்தியாகப் படம் பிடித்துள்ளார், திரு மில்லர்! ஒரு காண்டாமிருகத்தின் கண் எத்தகைய கலைத்திறனோடு படம் பிடிக்கப்பட்டுள்ளது! பனித்துளிகள் தூங்கும் இலை மேலே கம்பீரமாக வீற்றிருக்கும் வெட்டுக்கிளியைக் கண்டு பிரமிக்கிறோம். முட்டையை உடைத்துக் கொண்டு வெளிப்படும் நல்ல பாம்புக் குட்டி மில்லரின் வருகைக்காகக் காத்திருந்ததா அல்லது மில்லர் தாம் காமிராவைத் தயாராக வைத்துக் கொண்டு காத்திருந்தாரா என்று வியக்கிறோம். நெஞ்சை அள்ளும் எழில் வாய்ந்த பஞ்சாபி யுவதி ஒருத்தி எவ்வளவு ஒயிலாக 'போஸ்' கொடுக்கிறாள்! உற்றுக் கவனித்தால் அவளது உதடுகளிலே ஒரு மினுமினுப்புத் தெரிகிறது. ''இந்தியன் எக்ஸ்பிரஸ் நிறுவனத்தில் நான் வேலையில் சேருவதற்குமுன்பு பம்பாயில் ஃபாஷன் ஃபோட்டோகிராபியில் ஈடுபட்டிருந்தேன். அந்தப் பெண்ணின் பெயர் 'காஸ்டா!' அவள் கழுத்தில் அணிந்துள்ள வைர அட்டிகையின் விலை பன்னிரண்டாயிரம் ரூபாய்!'' என்று விவரம் சொல்கிறார் மில்லர். ''அதிகம் பழகியிராத என்னிடம், அது போன்ற பல விலை உயர்ந்த நகைகளை விட்டு விட்டுச்

1. முட்டையிலிருந்து வெளி வரும் பாம்பு.
2. மில்லரின் புதல்வி குமாரி நிஷா.
3. பஞ்சாபிப் பெண்.
4. ஆட்டின் வாலைப் பிடித்திழுக்கும் சிறுவன் ராபின்.
5. புகைப்படக் கலைஞர் திரு ஹாரி மில்லர்.



செல்லுவாள் அவள். மறுநாள் புகைப்படம் எடுத்துக் கொள்ள வரும்போது என்னிடமிருந்து நகைகளைக் கேட்டு வாங்கி அணிந்து கொள்ளுவாள்! என்னிடத்தில் எவ்வளவு நம்பிக்கை பாருங்கள்!'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினார் மில்லர்.

லண்டனிலுள்ள ராயல் போட்டோகிராபிக் சொஸைட்டி முதலிய நிறுவனங்களில் அங்கம் வகிக்கும் திரு ஹாரி மில்லரின் அநுபவங்கள் சுவையானவை; இக்கலையில் ஈடுபடும் 'அமெச்சூர்'களுக்குப் பயனளிப்பவை. அவர் கூறுகிறார்: ''பிலிம் நெகடிவ் இருக்கிறதே. அதைப் புகைப்படக்காரர் முற்றும் பயன்படுத்த



வேண்டும். புல்தரையில் ஓர் அல்சேஷன் நாயை நிறுத்தி வைத்துப் புகைப்படம் எடுத்து, அதைப் பெரிய அளவில் 'பிரிண்ட்' போட்டுத் தரும்படி கேட்கிறார் ஒரு நண்பர். 'நெகடிவ் பிலிமை' வாங்கிப் பார்த்தால், ஃப்ரேமில் முக்கால் பகுதிக்கு மேல் புல்தரைதான் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது; மீதி கால் பகுதியில் இடம் பெற்றிருக்கும் நாயின் உருவம் எவ்வளவு சிறிதாயிருக்குமென்று கூறவும் வேண்டுமா ? நாயின் உருவத்தைப் படம் பிடிக்க விரும்பினால், புல்தரை ஃபிரேமின் பெரும் பகுதியில் இடம் பெறுவானேன்? படம் முழுவதும் நாயின் உருவந்தான் இடம் பெற வேண்டும்.''

விலங்குகள், பறவைகளையெல்லாம் படம் எடுப்பது இலேசான காரியமல்ல. இது குறித்து மில்லர் அளிக்கும் விளக்கம்: ''மிருகங்களைப் படம் பிடிப்பது எவ்வளவு சிரமமோ, அவ்வளவுக்குக் குழந்தைகளைப் படம் எடுப்பதும் சங்கடமானதுதான் ! குழந்தைகளின் மட்டத்துக்குக் காமிராவை இறக்கிப் பிடிக்க வேண்டும். தரையில் படுத்திருக்கும் குழந்தையைப் படம் எடுப்பதாயின், நாம் நின்றுகொண்டு காமிராவை மேலிருந்து கீழ் நோக்கிப் பிடிப்பது தவறு. ஒன்று, நாமும் தரையில் குழந்தையின் மட்டத்துக்கு அமர்ந்து கொண்டு படம் எடுக்க வேண்டும்; அல்லது குழந்தையை ஒரு மேஜையின்மீது உட்கார வைத்து அந்த மட்டத்துக்குச் சரியாகக் காமிராவைப் பிடித்துக் கொண்டு படம் எடுக்க வேண்டும். நின்ற நிலையில் 'காமிராவை கீழ் நோக்கிப் படமெடுத்தால் குழந்தையின் தலைமயிர் 'பம்'மென்று பிரதானமாகத் தெரியும். அல்லது குச்சிகுச்சியாக நீட்டிக்கொண்டிருக்கும். இப்படிப் பலவித குறைகள் தெரியும்.''

''வண்ணத்துப் பூச்சி, வெட்டுக்கிளி இவைகளைப் படமெடுக்க இயற்கை வெளிச்சம் நல்லதா, அல்லது 'ஃப்ளாஷ் லைட்' உபயோகிப்பீர்களா ?''

''எலெக்ட்ரானிக் ஃப்ளாஷ் உபயோகித்தால் நிழல் விழாத, நல்ல படமாக எடுக்கலாம். ஒரு விநாடியில் ஆயிரத்தில் ஒரு பங்கு நேரந்தான் படம் எடுக்கத் தேவைப்படும்.''

பதினைந்து ஆண்டுகளாகச் சென்னையிலே வசித்து வரும் திரு மில்லருக்குப் புகைப்படக் கலையில் ஆர்வம் அதிகமா, விலங்குகளிடம் அன்பு அதிகமா என்று கேட்டால் பதில் கூறுவது கடினம். சென்னை நகரிலிருந்து ஆவடி செல்லும் வழியிலுள்ள திருமுல்லைவாயில் கிராமத்தில் உள்ள இவரது இல்லத்தில், மலபார் அணில்கள், ஒரு மலைப் பாம்பு, சில நல்ல பாம்புகள், கிளி, ஏராளமான தவளைகள், நாய் முதலிய பல பிராணிகள் வளர்ந்து வருகின்றன.

விஷப் பாம்புகளை வீட்டில் வளர்ப்பது ஆபத்தாயிற்றே என்று கேட்டதும் மில்லர் ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டார்: ''என் உதவியாளர் ராமு — அவரும் ஒரு நல்ல புகைப்படக் கலைஞர் — ஒரு தடவை நல்ல பாம்பைக் கையால் பிடிக்கும்போது, பாம்பு அவரைக் கைவிரலில் கடித்து விட்டது. பாம்பின் தலையைப் பிடிக்க அசாதாரணத் திறமை வேண்டும். சர்ப்பம் பக்கவாட்டில் தலையைத் திருப்பிக் கடித்து விடக்கூடும். தலையைத் திருப்ப முடியாமல் அதன் பற்களுக்கு அருகில் இறுகப் பிடித்துக் கொள்ள வேண்டும். நான் அருகில் இல்லாமலிருந்தால் அன்று ராமுவின்பாடு ஆபத்தாயிருக்கும். நான் ராமுவின் கை விரலில் கத்தியால் கீறி இரத்தத்தை உறிஞ்சி எடுத்து விட்டேன். ராமுவின் உயிர் தப்பியது.''

திரு மில்லரின் மனைவி ஸ்ரீமதி ரேவதி (பிரபல தேசபக்தர் திரு ஸ்ரீநிவாச அய்யங்காரின் பேத்தி) தன் கணவர் வீட்டில் பாம்புகளையும் தவளைகளையும் வளர்ப்பதை ஆட்சேபிப்பதில்லையாம். மாறாக, மில்லருக்கு இவ்விஷயத்தில் ஊக்கமளித்து ஒத்துழைக்கிறாராம். தம் இல்லத்துக்கே 'தவளைகள்' (The Frogs) என்று பெயர் சூட்டியுள்ளனர், மில்லர் தம்பதி.

சரளமாகப் பழகும் இனிய சுபாவமுள்ளவர் மில்லர். பிரிட்டனில் பிறந்த ஆங்கிலேயர்தாம்; கிராம வாழ்க்கையைப் பெரிதும் போற்றுகிறார். தமிழில் எழுதுவதைப் படிக்கிறார். திருமுல்லைவாயில் மக்களுக்கு ஏதாவது உடம்புக்கு வந்தால், மில்லர் தம்பதியர் இலவசமாக மருந்துகள் வழங்குவதுடன், தினமும் கிராமத்துக் குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்குகின்றனர். மத வேறுபாடுகளைக் கடந்து அன்பு வாழ்க்கை நடத்தும் அனந்தமான குடும்பம்.

பேட்டி : **பாணன்**



## ஆசாரியர் அருள் வாக்கு

*பரமேசுவரா! உன் பாதபத்மத்தில் என் மனம் நிலைக்கட்டும்; உனது துதியில் என் வாக்கு நிலைக்கட்டும்; உனது அர்ச்சனையில் என் கரங்கள் நிலைக்கட்டும்; உன் திருவிளையாடலைக் கேட்பதில் என் காது நிலைக்கட்டும்; உனது தியானத்தில் என் புத்தி நிலைக்கட்டும்; உன் திரு உருவத்தில் என் கண்கள் நிலைக்கட்டும். இவ்வாறு எல்லாப் புலன்களையும் உன்பாற் படுத்தியபின், அவற்றால் நான் வேறென்ன அறியக் கிடக்கிறது?*

# பரிபூரண அழகு பராமரிப்பு-

## எவ்வேளையிலும் எங்குமே

**க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் துணையுடன் வேனிஷிங் க்ரீமாக உபயோகிக்க வேண்டுமா?**
**ஓ...தாராளமாக**

ஏனெனில் லாக்டோகாலமைன் ஒரு உயர்ந்த வேனிஷிங் க்ரீம் போலவே உங்கள் சருமத்தை மிருதுவாக்கி, வெயில், காற்று தூசு, இவற்றிலிருந்து பாதுகாக்கிறது

ஆனல்... இதுமட்டுமல்ல லாக்டோ-காலமைனின் பெருமைக்கு காரணம். காலமைன் மற்றும் விட்ச்ஹேஸல் கொண்ட லாக்டோ-காலமைன் உங்கள் சருமத்தை இதமாக பேணுகிறது ...சுத்தீகரித்து,ஈரத்தன்மை-யளித்து நயமான மென்மையும் தருகிறது.மேலும் பகல், இரவு எந்நேரத்திற்கும் உகந்த அருமையான ஒப்பனைசாதனம் க்ருக்ஸ் லாக்டோ காலமைன்.

உங்கள் முக எழிலுக்கு உண்-மையில் லாக்டோகாலமைன் தவிர வேறு எதுவுமே வேண்டாம்.

க்ருக்ஸ்

## லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு !




க்ருக்ஸ் இன்டர்ப்ரான் லிமிடெட், பம்பாய்-25.

CIL 8TM

இப்பொழுது சிறிய சைஸ்களிலும் கிடைக்கும்



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

இருபத்திரண்டாம் அத்தியாயம்

## சிறையில் சேந்தன் அமுதன்

தஞ்சைக் கோட்டைக்குள் பொற்காசுகள் வார்ப்படம் செய்யும் தங்கச்சாலை மற்றொரு சிறிய கோட்டை போல அமைந்திருந்தது. தங்கச் சாலைக்கு வெளிப்புறத்தில் கட்டுக் காவல் தஞ்சைக் கோட்டை வாசலில் உள்ளது போலவே வெகு பலமாயிருந்தது. அன்று மாலை குந்தவை தேவியும் வானதியும் தங்கச் சாலையைப் பார்வையிடச் சென்ற போது வேலை முடிந்து பொற்கொல்லர்கள் வெளியில் புறப்படும் சமயம். வாசற்காவலர்கள் பொற்கொல்லர்களைப் பரிசோதித்து வெளியில் அனுப்ப ஆயத்தமானார்கள். பொற் கொல்லர்கள் வாசலண்டை வந்து குவிந்திருந்தார்கள். அந்த நேரத்தில் அரண்மனை ரதம் வந்து தங்கச்சாலையின் வாசலில் நின்றது. குந்தவையும் வானதியும் இறங்கினார்கள். அவர்களைப் பார்த்ததும் காவலர்களும் பொற்கொல்லர்களும் மெய்மறந்து நின்று, ''வாழ்க, இளைய பிராட்டி!'' என்று கோஷித்தார்கள். தங்கச் சாலையின் தலைவர் ஓடி வந்து அரச குமாரிகளை ஆர்வத்துடன் வரவேற்றார். உள்ளே அழைத்துச் சென்று பொன்னைக் காய்ச்சும் அக்கினி குண்டம், நாணய வார்ப்படம் செய்யும் அச்சுக்கள், அச்சிட்ட நாணயங்கள் முதலியவற்றைக் காட்டினார். அன்றைய தினம் வார்ப்படமான தங்க நாணயங்கள் ஒரு பக்கத்தில் குப்பலாகக் கிடந்தன. அந்தப் பசும் பொன் நாணயங்களின் ஒளி கண்களைப் பறித்தது. ஒவ்வொரு நாணயத்திலும் ஒரு பக்கத்தில் புலியின் முத்திரையும் மற்றொரு பக்கம் கப்பல் முத்திரையும் பதித்திருந்தன.

''பார்த்தாயா, வானதி! எத்தனையோ காலமாக இந்தச் சோழ நாட்டுக்கு உலகெங்குமிருந்து தங்கம் வந்து கொண்டிருந்தது. தரை வழியாகவும் வந்தது; கப்பல் வழியாகவும் வந்தது. இது வரை அவ்வளவு தங்கத்தையும் சுமக்கும் பொறுப்பு சோழ நாட்டுப் பெண் குலத்துக்கே இருந்து வந்தது. ஆபரணங்களாகச் செய்து போட்டுக் கொண்டு தூக்க முடியாமல் தூக்கி வந்தார்கள். கொஞ்ச காலமாகச் சோழ நாட்டுப் பெண்களுக்கு அந்தப் பாரம் குறைந்து வருகிறது. நம் தனதிகாரி பழுவேட்டரையர் இம்மாதிரி கண்ணைப் பறிக்கும் தங்க நாணயங்களை வார்ப்படம் செய்ய ஏற்பாடு பண்ணி விட்டார்!'' என்று குந்தவை சொன்னாள்.

''அக்கா! இதனால் என்ன சௌகரியம்?'' என்று வானதி கேட்டாள்.

''என்ன சௌகரியமா? நீ ஒன்றுமே தெரியாத பெண்ணடி! இம்மாதிரி பொன்னை நாணயங்களாகச் செய்து விட்டால், 'இவ்வளவு பொன்' என்று நிறுத்துப் பாராமலே மதிப்பிடச் சௌகரியம். குடிகள் அரசாங்கத்துக்கு வரி கொடுக்கச் சௌகரியம். வர்த்தகர்கள் வெளி நாட்டாரோடு வியாபாரம் செய்வதில் பண்டத்துக்குப் பண்டம் மாற்றிக் கொண்டு கஷ்டப்பட வேண்டியதில்லை. பொன் நாணயங்களைக் கொடுத்துப் பொருள்களை வாங்கலாம்; பொன் நாணயங்களைப் பெற்றுக் கொண்டு பண்

டங்களை விற்கலாம். ஆகையினாலே தான் சோழ நாட்டு வர்த்தகர்கள் நம் தனாதிகாரி பழுவேட்டரையரை வாழ்த்துகிறார்கள்.... இன்னும் ஒன்று சொல்கிறேன், கேள்!'' என்று கூறிக் குந்தவை தேவி குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னாள்: '' சக்கரவர்த்திக்கும் சக்கரவர்த்தியின் குடும்பத்துக்கும் எதிராகச் சதி செய்பவர்களுக்கு இந்த நாணயங்களினால் அதிக சௌகரியம். எப்படிப்பட்ட உத்தமர்களையும் இந்தப் பொற் காசுகளின் மூலம் துரோகிகள் ஆக்கி விடலாம் அல்லவா ?'' என்றாள்.

அருகில் நின்ற தங்கசாலைத் தலைமை அதிகாரியின் காதில் குந்தவை கடைசியில் கூறிய வார்த்தைகள் இலேசாக விழுந்தன. அந்த அதிகாரி, '' ஆம், தாயே! அம்மாதிரி பயங்கரமான வதந்திகள் எல்லாம் இக்காலத்தில் கேள்விப்படுகிறோம். ஆகையினாலேதான் இப்போது கொஞ்ச நாளாக இந்தத் தங்கசாலைக்குக் கட்டுக்காவல் அதிகமாயிருக்கிறது. இதன் அடியில் உள்ள பாதாளச் சிறைக்கு வருவோர் போவோரும் அதிகமாகி விட்டார்கள்'' என்று சொன்னான்.

'' வருகிறவர்கள் உண்டு; போகிறவர்கள் கூட உண்டா ?'' என்று குந்தவை கேட்டாள்.

''ஏன்? அதுவும்உண்டு. இன்று காலையில் ஒருவனைக் கொண்டு வந்தார்கள். ஒரு நாழிகைக்கு முன்னால் அவனைத் திரும்பக் கொண்டுபோய்விட்டார்கள்!'' என்று அந்த அதிகாரி கூறினான்.

அது யாராயிருக்கும் என்று குந்தவைக்குச் சிறிது வியப்பாயிருந்தது.

தங்கச் சாலைக்குள் பற்பல வேலைகள் நடக்கும் இடங்களைப் பார்த்து விட்டுப் பின்புறமாகச் சென்றார்கள். பின் சுவரில் ஒரு சிறிய வாசல் இருந்தது. அதைத் திறந்து கொண்டு சென்றார்கள். சென்ற இடத்தில் வெளிச்சம் குறைவாக இருந்தது. கூரை தாழ்வாக இருந்தது. நாலுபுறமிருந்தும் கேட்டவர்கள் ரோமம் சிலிர்க்கும்படியான உறுமல் சத்தம் கேட்டது. ஒரு சேவகன் தீவர்த்தி பிடித்துக் கொண்டு நின்றான். அதன் வெளிச்சத்தில் நாலு



புறமும் உற்றுப் பார்த்தபோது பல கூண்டுகளும் அவற்றுக்குள்ளே அடைபட்ட புலிகளும் இருப்பது தெரிந்தது. அவற்றில் சில வேங்கைப் புலிகள்; சில சிறுத்தைப் புலிகள். சில படுத்திருந்தன; சில கூண்டுக்குள் முன்னும் பின்னும் உலாவிக் கொண்டிருந்தன. அவற்றின் கண்கள் அந்த இடத்தின் மங்கலான வெளிச்சத்தில் நெருப்புத் தணல்களைப் போல் ஒளிர்ந்தன.

குந்தவை வானதியின் கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "அடியே! பயமாயிருக்கிறதா? இங்கே மூர்ச்சை போட்டு விழுந்து வைக்காதே!" என்றாள்.

வானதி இலேசாகச் சிரித்துவிட்டு, "புலியைக் கண்டு என்ன பயம், அக்கா! புலி நம்முடைய குலத்தின் காவலன் அல்லவா?" என்றாள்.

"சில சமயம் காவலர்களே எதிரிகளுடன் சேர்ந்து விடுவார்கள் அல்லவா? அப்போது அபாயம் அதிகம் ஆயிற்றே?"

"இல்லை, அக்கா! மனிதக் காவலர்கள் அப்படி ஒருவேளை துரோகம் செய்யலாம். இந்தப் புலிகள் அப்படிச் செய்ய மாட்டா!"

"சொல்வதற்கில்லை. இந்தப் புலிகள் எத்தனையோ இராஜாங்கத் துரோகிகளைச் சாப்பிட்டிருக்கின்றன. அவர்களுடைய இரத்தம் இந்தப் புலிகளின் உடம்பில் கலந்திருக்கும் அல்லவா?"

பயமேயில்லை என்று சற்று முன் கூறிய வானதியின் உடம்பு இப்போது சிறிது நடுங்கத்தான் செய்தது.

"அக்கா! என்ன சொல்கிறீர்கள்? உயிருள்ள மனிதர்களை இந்தப் புலிகளுக்கு இரையாகக் கொடுப்பார்களா, என்ன?" என்று கேட்டாள்.

"அப்படிச் செய்ய மாட்டார்கள். இந்தத் தங்கச் சாலைக்கு அடியில் பாதாளச் சிறை இருக்கிறது என்று சொன்னேன் அல்லவா? அதற்குள் போவதற்கும் வருவதற்கும் ஒரே வழிதான். அந்த வழி இந்தப் புலி மண்டபத்தில் இருக்கிறது. சிறைக்குள்ளிருந்து யாராவது தப்பித்து வர முயன்றால் இந்த மண்டபத்துக்குள்ளேதான் வர வேண்டும். அப்போது புலிகளுக்கு இரையாவார்கள்!"

"சிவ சிவா! என்ன கொடூரம்?"

"இராஜாங்கம் என்றால் அப்படித்தான்! கருணையும் உண்டு; கொடூரமும் உண்டு. வானதி! ஒரு சமயத்தில் என்னையே இந்தப் பாதாளச் சிறையில் அடைத்தாலும் அடைத்து விடுவார்கள். சின்னப் பழுவேட்டரையர் இன்றைக்கு என்னுடன் பேசியதை நீ கேட்டிருந்தால்...."

"நன்றாயிருக்கிறது, அக்கா! தங்களைப் பிடித்துச் சிறையில் அடைக்கும் வல்லமையுள்ளவர்கள் ஈரேழு பதினாலு உலகத்திலும் இல்லை. அப்படி யாராவது செய்ய முயன்றால் பூமி பிளந்து இந்தத் தஞ்சை நகரத்தையே விழுங்கி விடாதா? அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நம்முடைய பழையாறை வைத்தியர் மகனைப் பற்றித்தான் கவலைப்படுகிறேன். அந்தச் சாதுப் பிள்ளை தப்ப முயன்றிருக்க மாட்டான் அல்லவா?"

"சாதுப் பிள்ளைதான்! ஆனால் யார் எப்போது எப்படி மாறுவார்கள் என்று சொல்ல முடிவதில்லையே?"

புலிகளின் உறுமல் கோஷம் இன்னும் அதிகமாயிற்று.

காவலனைப் பார்த்து, "புலிகளுக்கு ரொம்பக் கோபம் போலிருக்கிறதே!" என்றாள் குந்தவை.

"இல்லை, தாயே! சக்கரவர்த்தியின் திருக் குமாரியை இவை வாழ்த்தி வரவேற்கின்றன!" என்று காவலன் சமத்காரமாய் மறுமொழி கூறினான்.

"நல்ல வரவேற்பு!" என்றாள் குந்தவை.

"அதோடு புலிகளுக்கு இரை போடும் சமயம் நெருங்கி விட்டது. இரையை நினைத்தும் உறுமுகின்றன!"

"அப்படியானால் நாம் சீக்கிரம் போய் விடலாம். சிறையின் வாசல் எங்கே இருக்கிறது?"

மண்டபத்தின் ஒரு மூலைக்கு இதற்குள் அவர்கள் வந்திருந்தார்கள். அங்கிருந்த புலிக் கூண்டு ஒன்றைக் காவலர்கள் அப்பால் நகர்த்தினார்கள். அங்கே தரையில் பதிந்திருந்த கதவு ஒன்று காணப்பட்டது. இரண்டு ஆட்கள் குனிந்து கதவை வெளிப்புறமாகத் திறந்தார்கள். உள்ளே சில படிக்கட்டுக்கள் காணப்பட்டன. அவற்றின் வழியாக ஒவ்வொருவராக இறங்கிச் சென்றார்கள். இருள் அதிகமாயிற்று. இரு சேவகர்கள் பிடித்திருந்த இரண்டு தீவர்த்திகளிலிருந்து புகையினால் மங்கிய வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. குறுக்கும் நெடுக்குமாகச் சென்ற குறுகிய பாதைகளின் வழியாக அவர்கள் ஒற்றை வரிசையில் போக வேண்டியிருந்தது.

அங்கே புலிகளின் பயங்கர உறுமல் ரோமம் சிலிர்க்கச் செய்தது என்றால், இங்கே நாலு புறத்திலும் எழுந்த தீனமான சோக மயமான மனிதக்

குரல்கள் உள்ளம் பதறி உடல் நடுங்கச் செய்தன.

ஆனால் அந்தத் தீனக் குரல்களுக்கு மத்தியில், — விந்தை! விந்தை! — ஓர் இனிய குரல் கீதம் இசைத்ததும் கேட்டது.

**"பொன்னார் மேனியனே!**
**புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடைமேல்**
**மிளிர்கொன்றை அணிந்தவனே!"**

அந்தப் பாதாளச் சிறையில் இருந்த அறைகள் ஒரு வரிசையாக இல்லை. முன்னும் பின்னும் கோணலும் மாணலுமாக இருந்தன. ஒவ்வொரு அறை வாசலிலும் சென்று காவலன் தீவர்த்தியை உயர்த்திப் பிடித்தான். சில அறைகளில் உள்ளே ஒருவனே இருந்தான். சிலவற்றில் இருவர் இருந்தார்கள். சில அறைகளில் இருந்தவர் கலைச் சுவரில் அடித்திருந்த ஆணி வளையத்தில் சேர்த்துச் சங்கிலியில் கட்டியிருந்தது. சில அறைகளில் அவ்விதம் கட்டாமல் சுயேச்சையாக விடப்பட்டிருந்தார்கள். ஒவ்வொரு அறையிலும் இருந்தவர்களின் முகம் தெரிந்ததும் குந்தவை தேவி தலையை அசைக்க எல்லாரும் மேலே சென்றார்கள்.

நடுவில் ஒரு சமயம் வானதி, "இது என்ன கொடுமை? இவர்களை எதற்காக இப்படி அடைத்திருக்கிறது? நீதி விசாரணை ஒன்றும் கிடையாதா?" என்று கேட்டாள்.

அதற்குக் குந்தவை, "சாதாரண குற்றங்களுக்கு நீதி விசாரணை எல்லாம் உண்டு. ஆனால் இராஜாங்கத்துக்கு எதிராகச் சதி செய்தவர்கள், வெளிநாட்டு ஒற்றர்கள், ஒற்றர்களுக்கு உதவியவர்கள் — இவர்களைத்தான் இங்கே போடுவார்கள். அவர்களிடமிருந்து தெரிய வேண்டிய உண்மை தெரிந்து விட்டால் வெளியே விட்டு விடுவார்கள்! ஆனால் சிலரிடமிருந்து உண்மை ஒன்றும் தெரிவதில்லை. ஏதாவது இருந்தால்தானே சொல்லுவார்கள்? அவர்கள்பாடு கஷ்டந்தான்!" என்றாள்.

இதற்குள்ளாக, "பொன்னார் மேனியனே!" பாட்டு மிகச் சமீபத்தில் கேட்கத் தொடங்கியிருந்தது. அந்த அறையில் சென்று தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்த போது அங்கே ஒரு சிறு பிள்ளை இருப்பது தெரிந்தது. ஏற்கனவே நமக்குத் தெரிந்த பிள்ளை தான் அவன்; சேந்தன் அமுதன்.

அவனுடைய குற்றமற்ற பால்வடியும் பச்சைப் பிள்ளை முகம் இளவரசிகளுடைய கவனத்தைக் கவர்ந்தது.

அவனைக் குந்தவை பார்த்து, "பாடிக் கொண்டிருந்தது நீதானா?" என்று கேட்டாள்.

"ஆம், தாயே!" என்றான்.

"உற்சாகமாயிருக்கிறாய் போலிருக்கிறது!"

"உற்சாகத்துக்கு என்ன குறைவு, அம்மா! எங்கும் நிறைந்த இறைவன் இங்கேயும் என்னுடன் இருக்கிறார்!"

"பெரிய ஞானி போலப் பேசுகிறாயே? நீ யார் அப்பா? வெளியில் என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"நான் பெரிய ஞானியுமில்லை, சின்ன ஞானியுமில்லை, அம்மா! வெளியில் இருக்கும்போது பூமாலை புனைந்து இறைவனுக்குச் சமர்ப்பித்துக் கொண்டிருந்தேன். இங்கே பாமாலை புனைந்து மனத் திருப்தியடைகிறேன்!"

"நீ ஞானி மட்டுமல்ல; புலவன் என்றும் தெரிகிறது. இந்த ஒரு பாடல் தான் உனக்குத் தெரியுமா? இன்னும் பலவும் தெரியுமா?"

"இன்னும் சில பாடல்களும் வரும். ஆனால் இங்கு வந்தது முதல் இதையே பாடிக் கொண்டிருக்கிறேன்."

"ஏன்?"

"இங்கு வரும்போது தங்கச் சாலையின் வழியாக வந்தேன். இதுவரை நான் பார்த்திராத பத்தரை மாற்றுப் பசும்பொன் திரளைப் பார்த்தேன். அது 'பொன்னார் மேனியன்' திரு உருவத்தை எனக்கு நினைவூட்டியது...."

"அதிர்ஷ்டசாலி நீ! பொன்னைப் பார்த்தால் பலருக்குப் பலவித ஆசைகள் உண்டாகின்றன. உனக்கு இறைவனின் திருமேனியின் பேரில் நினைவு சென்றது. உனக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லையா, அப்பா?"

"தாயார் மட்டும் இருக்கிறாள். தஞ்சைக் கோட்டைக்கு வெளியில் தாமரைக் குளத்தருகில் இருக்கிறாள்."

"அந்த அம்மாள் பெயர்?"

"வாணி அம்மை."

"நான் அந்த அம்மாளைப் பார்த்து நீ இங்கே உற்சாகமாயிருக்கிறாய் என்று சொல்கிறேன்."

"பயனில்லை, அம்மா! என் தாய்க்குக் காதும் கேளாது; பேசவும் முடியாது...."

"ஓகோ! உன் பெயர் சேந்தன் அமுதனா?" என்று இளையபிராட்டி வியப்புடன் கேட்டாள்.

"ஆம், அம்மா! இந்த ஏழையின் பெயர் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே?"

"என்ன குற்றத்துக்காக உன்னை இங்கே கொண்டு வந்து சிறைப்படுத்தியிருக்கிறார்கள்?"

''நேற்றுவரை நான் செய்த குற்றம் இன்னதென்று எனக்கும் தெரியாம லிருந்தது. இன்றைக்குத்தான் தெரிந்தது.''

''என்ன என்று தெரிந்தது?''

''ஒற்றன் ஒருவனுக்கு உதவி செய்த குற்றத்துக்காக என்னைப் பிடித்து வந்து சிறைப்படுத்தியிருக் கிறார்கள் என்று தெரிந்தது.''

''அது என்ன? எந்த ஒற்றனுக்கு நீ உதவி செய்தாய் ?''

''தஞ்சைக் கோட்டை வாசலில் ஒரு நாள் வெளியூரிலிருந்து வந்த பிரயாணி ஒருவனைச் சந்தித்தேன். அவன் இர வில் தங்க இடம் வேண்டும் என்று சொன்னான். என் வீட்டுக்கு அழைத் துப் போனேன். ஆனால் அவன் ஒற் றன் என்று நான் கனவிலும் நினைக்க வில்லை....''

'' அவன் பெயர் என்னவென்று தெரியுமா ?''

''தன் பெயர் வல்லவரையன் வந் தியத்தேவன் என்று அவன் சொன் னான். பழைய வாணர் குலத்தைச் சேர்ந்தவன் என்றும் கூறினான்....''

குந்தவையும் வானதியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவருடைய உள்ளங்களும் ஒத்துப் பேசிக் கொண்டன.

வானதி சேந்தன் அமுதனைப் பார்த்து, ''எல்லாம் விவரமாகச் சொல், அப்பா !'' என்றாள்.

சேந்தன் அமுதன் அவ்விதமே கூறினான். வந்தியத் தேவனைக் கோட்டை வாசலில் தான் சந்தித்தது முதல், பழுவூர் ஆட்கள் தன்னை ஆற் றங்கரையில் பார்த்துப் பிடித்துக் கொண்டது வரையில் சொன்னான்.

''யாரோ முன்பின் தெரியாத ஒரு வழிப்போக்கனை நம்பி நீ எதற்காக அவ்வளவு தூரம் உதவி செய்தாய்?'' என்று வானதி கேட்டாள்.

'' தாயே ! சிலரைப் பார்த்தால் உடனே நமக்குப் பிடித்துப் போகிறது. அவர்களுக்காக உயிரையும் கொடுக்க லாம் என்று தோன்றுகிறது. காரணம் என்னவென்று சொல்வது? இன்னும் சிலரைப் பார்த்தால் அவர்களைக் கொன்று விடலாம் என்று தோன்று கிறது. இன்றைக்கு ஒரு மனிதனை என்னோடு கொஞ்ச நேரம் அடைத்து வைத்திருந்தார்கள். அவன் பேரில் எனக்கு வந்த கோபத்துக்கு அள வில்லை. நல்ல வேளையாக, சற்று நேரத் துக்கு முன்பு பழுவூர் இளையராணி யின் ஆட்கள் வந்து அவனை விடுதலை செய்து கொண்டு போனார்கள்....!''

'' அதுவும் அப்படியா ?'' என்று குந்தவை பற்களினால் தன் செவ்விதழ் களைக் கடித்துக் கொண்டாள். அவ ளுடைய புருவங்கள் நெரிந்தன. ஆத் திரப் பெருமூச்சு வந்தது.

''அவ்வளவு அவசரமாக விடுதலை யான மனிதன் யார்? உனக்குத் தெரி யுமா?'' என்று கேட்டாள்.

'' தெரியாமல் என்ன? யாரோ பழையாறை வைத்தியன் மகனும் !''

''அப்படி என்ன அப்பா, அவன் தகாத வார்த்தைகளைச் சொன்னான் ? அவனைக் கொன்று விடலாமா என்று அவ்வளவு கோபம் உனக்கு வந்த தாகச் சொன்னாயே ?''

''கோடிக்கரையில் என் மாமன் மகள் பூங்குழலி இருக்கிறாள். அவளைப் பற்றி இவன் தகாத வார்த்தைகளைச் சொன்னான். அதனாலேதான் அவன் பேரில் எனக்கு அவ்வளவு கோபம் வந்தது. ஆனாலும் அவன் ஒரு நல்ல சமாசாரம் சொன்னபடியால் போனால் போகிறதென்று விட்டு விட்டேன்.''

'' அது என்ன அவ்வளவு நல்ல சமாசாரம், அப்பா !''

'' என்னுடைய நண்பன் வந்தியத் தேவனுடனேதான் இவன் கோடிக் கரைக்குப் போனான். அங்கே இந்தச் சண்டாளன் என் சிநேகிதனுக்குத் துரோகம் செய்து பழுவூர் ஆட்க ளிடம் பிடித்துக் கொடுத்துவிடப் பார்த்தான். அது முடியவில்லை....''

''முடியவில்லையா? அப்படியானால் அந்த ஒற்றன் தப்பித்துக் கொண்டு விட்டானா?'' என்று வானதியும் குந்த வையும் ஒரே குரலில் ஆர்வத்துடன் கேட்டார்கள். இதைத் தெரிந்து கொள்ளத்தானே அவர்கள் இந்தப் பாதாளச் சிறைக்குள்ளே வந்தது?

'' ஆம், அம்மணி! என் நண்பன் தப்பித்துக் கொண்டு போய் விட்டான். பூங்குழலி அவனை இரவில் படகில் ஏற்றிக் கொண்டு கடலில் இலங்கைத் தீவுக்குச் சென்று விட்டாளாம் ! தேடிப் போனவர்கள் ஏமாந்தார்கள். இந்தப் பாதகனும் ஏமாந்தான் !''

பெண்மணிகள் இருவரும் ஒரு வரை யொருவர் பார்த்துக் கொண் டார்கள். அவர்களுடைய உள்ளத்தில் ததும்பிய மகிழ்ச்சியை அவர்களுடைய முகமலர்கள் வெளியிட்டன.

குந்தவை சேந்தன் அமுதனைப் பார்த்து, ''அப்பனே! ஒற்றன் ஒரு வன் தப்பித்துக் கொண்டது பற்றி நீ இவ்வளவு சந்தோஷப்படுகிறாயே ? உன்னைச் சிறையில் வைத்திருப்பது சரிதான் !'' என்றாள்.

''தாயே! அந்தக் குற்றத்துக்காக என்னைச் சிறையில் போடுவது சரியானால், உங்கள் இருவரையுங்கூட எனக்குப் பக்கத்து அறையில் போட வேண்டுமே!'' என்றான்.

பெண்மணிகள் இருவரும் நகைத்தார்கள். இருளடைந்த அந்தப் பாதாளச் சிறையில், சேந்தன் அமுதனுடைய பாட்டு எவ்வளவு விசித்திரமாயிருந்ததோ, அப்படி அவர்களுடைய சிரிப்பும் அபூர்வமாக ஒலித்தது.

''நீ வெகு கெட்டிக்காரன். மிகப் பொல்லாதவன். உன்னை இங்கே வைத்திருந்தால் நீ பாட்டுப் பாடியே இங்கேயுள்ள மற்றவர்களையும் கெடுத்து விடுவாய். கோட்டைத் தலைவரிடம் சொல்லி உன்னை விடுதலை செய்யப் பண்ணிவிட்டு மறு காரியம் பார்க்க வேண்டும்'' என்றாள் குந்தவை.

''தாயே! அப்படிச் செய்ய வேண்டாம்! அடுத்த அறையில் ஒரு மனிதன் இருக்கிறான். அவன் என்னிடம் தினம் நூறு தடவை 'நீ எனக்கு ஒரு பாட்டுச் சொல்லிக் கொடு! சொல்லிக் கொடுத்தால், பாண்டிய குலத்து மணி மகுடமும் மாலையும் இலங்கையில் எங்கே ஒளித்து வைத்திருக்கிறேன் என்று தெரிவிக்கிறேன்' என்பதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். அந்த இரகசியத்தை நான் தெரிந்து கொள்ளும் வரையில் இங்கேயே விட்டு வைக்கச் சொல்லுங்கள்!'' என்றான் சேந்தன் அமுதன்.

''பாவம்! அந்த மாதிரி உனக்கும் பைத்தியம் பிடிக்கும் வரையில் இங்கேயே இருப்பேன் என்கிறாயா? அப்புறம் உன் தாயார் வாணியம்மையின் கதி என்ன?'' என்று கூறி விட்டு இளையபிராட்டி அங்கிருந்து புறப்பட, மற்றவர்களும் சென்றார்கள்.

அரை நாழிகை நேரத்துக்கெல்லாம் சில சேவகர்கள் வந்து சேந்தன் அமுதனைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்து தஞ்சைக் கோட்டை வாசலில் கொண்டு போய் விட்டார்கள்.

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

# நந்தினியின் நிருபம்

அன்று மாலை நந்தினி லதா மண்டபத்தில் ஹம்ஸ தூளிகா மஞ்சத்தில் அமர்ந்து நிருபம் ஒன்று எழுதிக் கொண்டிருந்தாள். சில வரிகள்தான் எழுதினாள். எழுதும்போது சில சமயம் சுழற் காற்றில் இளங்கொடி நடுங்குவதுபோல் அவள் உடம்பு நடுங்கிற்று. அடிக்கடி நெடுமூச்சு விட்டாள். அந்தக் குளிர்ந்த வேளையில் பக்கத்தில் தாதிப் பெண் நின்று மயில் விசிறியால் விசிறிக் கொண்டிருந்தும் அவளுடைய பளிங்கு நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளித்திருந்தது. அவள் எழுதிய நிருபமாவது:—

**''அரசிளங் குமரா! தயங்கித் தயங்கி, பயந்து, பயந்து, இந்த நிருபம் எழுதத் துணிந்தேன். இராஜ்யத்தின் நிலைமையைப் பற்றிப் பலவிதமான செய்திகள் காதில் விழுகின்றன. தாங்கள் எதையும் கவனிப்பதில்லை. நோயினால் மெலிந்திருக்கும் தங்கள் தந்தை பல முறை சொல்லி அனுப்பியும் தாங்கள் தஞ்சைக்கு வரவில்லை. இதற்குக் காரணம் நான்தானோ என்ற எண்ணம் என்னை வதைக்கிறது. தங்களை ஒரு முறை சந்தித்தால் எல்லாச் சந்தேகங்களையும் போக்கி விடுவேன். அதற்குத் திருவுளம் இரங்குவீர்களா? தஞ்சைக்கு வர விருப்பமில்லா விட்டால், கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் சந்திக்கலாம். நான் இன்று தங்கள் பாட்டியின் ஸ்தானத்தில் இருக்கிறேன். நாம் சந்தித்துப் பேசுவதில் என்ன ஆட்சேபம் இருக்க முடியும்? இதைக் கொண்டு வரும் வீர இளைஞர், சம்புவரையர் குமாரரைத் தாங்கள் பூரணமாக நம்பி அவரிடம் எந்தச் செய்தியும் சொல்லி அனுப்பலாம். - இங்ஙனம், துரதிர்ஷ்டத்துடன் கூடப் பிறந்த அபாக்கியவதி நந்தினி.''**

உண்மையிலேயே தயங்கித் தயங்கி, யோசித்து யோசித்து, மேற்கூறிய நிருபத்தை எழுதிய பிறகு, விசிறிக் கொண்டிருந்த தாதிப் பெண்ணைப் பார்த்து, ''போடி! போய்க் கடம்பூர் இளவரசரை உடனே அழைத்து வா!'' என்றாள் நந்தினி.

தாதி சென்று கந்தமாறனை அழைத்து வந்து விட்டு விட்டுச் சற்று விலகிப் போய் நின்றாள்.

கந்தமாறனின் கண்கள் நந்தினியை ஏறிட்டுப் பார்ப்பதற்குக் கூசின.

சில முகங்கள் பேசாமல் பேசும்...
பேசுவது அன்பும் அழகும்...
காவியத்தையே அதில் காணலாம்.



டி.எஸ்.ஆர். & கோ.

மதராஸ்-16,
கும்பகோணம்.








எங்கேயோ தோட்டத்தைப் பார்த்த வண்ணம் கந்தமாறன் நின்றான்.

"ஐயா! உட்காருங்கள்!" என்று கூறிய நந்தினியின் குரல் நடுக்கம் கந்தமாறனை அவளுடைய முகத்தை உற்றுப் பார்க்கும்படி செய்தது.

நந்தினி தொடர்ந்து, "குந்தவை தேவியைப் பார்த்த கண்களினால் என்னைப் பார்க்க முடியாமலிருப்பதில் வியப்பில்லை!" என்று கூறிப் புன்னகை புரிந்தாள்.

அந்தச் சொற்கள் கந்தமாறனுடைய நெஞ்சைப் பிளந்தன. அவளுடைய புன்னகையோ அவனுடைய தலையைக் கிறுகிறுக்கச் செய்தது.

தட்டுத் தடுமாறி, "ஆயிரம் குந்தவைகள் ஒரு நந்தினி தேவிக்கு இணையாகமாட்டார்கள்!" என்றான்.

"ஆயினும், இளையபிராட்டி விரலை அசைத்தால் வானுலகம் சென்று இந்திரனுடைய சிம்மாசனத்தைக் கொண்டு வந்து விடுவீர்கள். நான் வருந்தி வேண்டிக் கொண்டால், உட்காரக்கூட மாட்டீர்கள்!"

கந்தமாறன் உடனே எதிரிலிருந்த மேடையில் உட்கார்ந்து, "தாங்கள் பணித்தால் பிரம்மலோகம் சென்று பிரம்மாவின் தலையைக் கொய்து கொண்டு வருவேன்!" என்றான்.

நந்தினி நடுநடுங்கினாள். கந்தமாறனைப் பாராமல் வேறு பக்கம் பார்த்துக் கொண்டு, "பரமசிவன் கொய்தது போகப் பிரம்மாவுக்கு மிச்சம் நாலு தலைகள் இருக்கின்றன. தாங்கள் இன்னொன்றைக் கொய்தாலும் பிரம்மா பிழைத்துப் போவார்!" என்றாள்.

"தேவி! வேறு எது வேண்டுமானாலும் சொல்லுங்கள். ஆனால் குந்தவை தேவியைப் பற்றி மட்டும் என்னிடம் புகழ்ந்து பேச வேண்டாம். சிநேகிதத் துரோகியான வந்தியத்தேவனுக்கு அவள் பரிந்து பேசியதை நினைத்தால் என்னுடைய இரத்தம் கொதிக்கிறது!" என்றான் கந்தமாறன்.

"ஆனாலும் இன்று காலையில் தங்களுடைய கற்பனா சக்தி அபாரமாயிருந்தது என்னவோ உண்மைதான்! தங்களுக்கும் தங்கள் நண்பனுக்கும் நடந்த துவந்த யுத்தம் பற்றி எவ்வளவு கற்பனையாகப் பேசினீர்கள்?" என்று நந்தினி கூறிய வார்த்தைகள் கந்தமாறனுக்குச் சிறிது வெட்கத்தை உண்டாக்கின.

"அவனைச் சந்தித்தது எப்படி என்பதற்கு ஏதாவது சொல்ல வேண்டும் அல்லவா? அதனால் சொன்னேன். அவன் என்னை முதுகில் குத்தியது என்னமோ உண்மைதானே!" என்றான்.

"ஐயா! அன்று நடந்ததையெல்லாம் தாங்கள் மறுபடியும் ஒரு தடவை ஞாபகப்படுத்திக் கொண்டு பார்ப்பது நல்லதல்லவா?" என்றாள் நந்தினி.

"தாங்கள்கூட என் வார்த்தையைச் சந்தேகிக்கிறீர்களா, என்ன?"

"சந்தேகிக்கவில்லை. ஆயினும் தாங்கள் சில விஷயங்களை மறந்து விட்டிருக்கிறீர்கள். வந்தியத்தேவனை என்றைக்காவது ஒரு நாள் சிறைப்படுத்திக் கொண்டு வருவார்கள். அப்போது தாங்கள் அவன் மீது சாட்டும் குற்றம் உண்மையென்று ருசுவாக வேண்டும் அல்லவா?"

"அதில் எனக்கு ஒன்றும் சிரத்தை இல்லை. அவனை இன்னமும் மன்னித்து விடவே விரும்புகிறேன்."

"தங்களுடைய பெருந்தன்மையைப் பாராட்டுகிறேன். ஆயினும் நமக்குள் உண்மையை நிச்சயம் செய்து கொள்வது நல்லது. அன்றிரவு நடந்ததையெல்லாம் மீண்டும் ஒரு முறை ஞாபகப்படுத்திக் கொண்டு பாருங்கள். நிலவறையின் வழியாகத் தாங்கள் வந்தபோது பழுவேட்டரையரையும் என்னையும் வழியில் சந்தித்தீர்கள். தங்களுக்கு அது நினைவிருக்கிறதா?"

"நன்றாய் நினைவிருக்கிறது. என் உடம்பில் உயிர் உள்ள வரையில் அதை நான் மறக்க முடியாது."

"அப்போது தாங்கள் என்ன சொன்னீர்கள் என்பதும் நினைவிருக்கிறதல்லவா?"

"என்ன சொன்னேன் என்பது நினைவில்லை. தங்களைப் பார்த்த போது மெய்மறந்து போனேன்."

"ஆனால் தாங்கள் சொன்னது எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. 'ஐயா! தங்கள் குமாரியின் அழகைப் பற்றி நான் எவ்வளவோ கேள்விப்பட்டதுண்டு. ஆனால் அதெல்லாம் உண்மைக்கு உறைபோடக் காணாது!' என்று சொன்னீர்கள்!...."

"ஐயையோ! அப்படியா சொன்னேன்? — அதனால்தான் அவர் முகம் அப்படிச் சிவந்ததாக்கும்! இப்போது கூட அவருக்கு என்னைக் கண்டால் அவ்வளவாகப் பிடிக்கவில்லை...."

நந்தினி சிரித்துவிட்டு, "உங்களை அவருக்குப் பிடிக்காவிட்டால் பாதகமில்லை; உங்களுக்கு அவரைப் பிடித்திருக்கிறதல்லவா? அதுவே போதும்!" என்றாள்.

"தேவி! உண்மையைச் சொல்கிறேன். தங்களிடம் மறைப்பதில் பயன் என்ன? எனக்கும் அவரைப் பிடிக்கவில்லை" என்றான் கந்தமாறன்.

"அதனாலும் பாதகமில்லை! எனக்கு அவரைப் பிடித்திருக்கிறது; அதுவே

போதும்! இப்படிப்பட்ட கணவனைப் பெறுவதற்கு நான் எவ்வளவு தவம் செய்தேனோ ?'' என்றாள்.

இதைக் கேட்டுக் கந்தமாறன் உள்ளம் குழம்பிற்று. ஒன்றும் சொல்லத் தெரியாமல் சும்மா இருந்தான்.

''அது போனால் போகட்டும்; நில வறையில் எங்களைப் பார்த்த பிறகு என்ன செய்தீர்கள்?'' என்று நந்தினி கேட்டாள்.

''நிவர்த்தி பிடித்து வந்த காவலன் வழி காட்டிக் கொண்டு சென்றான். நான் தங்கள் நினைவாகவே கூடச் சென்றேன். இரகசிய மதிள் கவரைத் திறந்து விட்டுக் காவலன் நகர்ந்து கொண்டான். நான் அதில் நுழைந்தேன். உடனே முதுகில் யாரோ குத்தினார்கள். அவ்வளவுதான் நினைவிருக்கிறது. வந்தியத்தேவன் நான் அங்கு வருவேன் என்பதை எப்படியோ தெரிந்து கொண்டு வெளியில் காத்திருந்திருக்க வேண்டும்....''

''இல்லை, ஐயா! தங்கள் ஊகம் மிகத் தவறானது. வெளியில் அவர் காத்திருக்கவே இல்லை.''

''தாங்கள்கூட அவன் கட்சியில் சேர்ந்து விட்டீர்களா ?''

''நான் ஏன் அவன் கட்சியில் சேர வேண்டும்? எனக்கு என்ன லாபம்? அல்லது அவனுக்குத்தான் என்ன லாபம்? இப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்று எனக்கு இப்போது நிச்சயமாய்த் தெரிகிறது.''

''சொல்லுங்கள், தேவி ! எப்படி யென்று சொல்லுங்கள்!''

''வந்தியத்தேவன் வெளியே காத்திருக்கவில்லை!....''

''பின்னே யார் காத்திருந்தார்கள்?''

''வேறு யாரும் இல்லை; வந்தியத்தேவன் வெளியில் காத்திருக்கவில்லை யென்றுதானே சொன்னேன் ? அவன் அந்தப் பொக்கிஷ நிலவறைக்குள்ளேயேதான் காத்திருந்திருக்கிறான்!''

''என்ன? என்ன? அது எப்படிச் சாத்தியமாக முடியும், தேவி !''

''அவன் அன்று திடீரென்று மாய மாய் மறைந்து விட்டான். எப்படி மறைந்திருப்பான் ? நீங்களே யோசித்துப் பாருங்கள்! எப்படியோ அவன் பொக்கிஷ நிலவறைக்குள் புகுந்து அவ்விடத்து இரகசியங்களை யெல்லாம் அறிந்து கொண்டான். பின்னர், உங்களைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறான். கதவைத் திறந்ததும் தங்களைப் பின்னாலிருந்து குத்தித் தள்ளி விட்டுத் தானும் வெளியேறியிருக்கிறான். அப்புறம் ஒரு வேளை அவன் மனச்சாட்சியே அவனை உறுத்தியிருக்கலாம். தங்களை அந்த ஊமையின் வீட்டில் கொண்டு போய்ப் போட்டு விட்டுப் போயிருக்கிறான்!....''

''தேவி! தாங்கள் சொல்கிறபடிதான் நடந்திருக்க வேண்டும்; சந்தேகமில்லை. இத்தனை நாளும் இது என் புத்திக்கும் எட்டவில்லை; மற்றவர்களுக்கும் புலப்படவில்லை! இந்தச் சோழ நாட்டிலேயே மதி நுட்பம் அதிகம் உள்ளவர் யார் என்று கேட்டால், தாங்கள்தான் என்று நான் சொல்லுவேன். இந்த உலகத்தில் அறிவு படைத்தவர்கள் உண்டு; அழகு படைத்தவர்கள் உண்டு. இரண்டும் சேர்ந்துள்ளவர்களைப் பிரம்ம சிருஷ்டியில் காண்பது அபூர்வம். தங்களிடந்தான் அழகு, அறிவு இரண்டும் பொருந்தி



யிருக்கக் காண்கிறேன்!'' என்று பரவசமாகக் கூறினான் கந்தமாறன்.

''ஐயா ! தாங்கள் இப்போது சொன்னது மனப்பூர்வமாகக் கூறின வார்த்தையா ? அல்லது உலகத்தில் விட புருஷர்கள் பர ஸ்திரீகளிடம் சொல்லும் முகஸ்துதியா ?''

''முகஸ்துதியல்ல; சத்தியமாக என் மனத்தில் இருப்பதையே சொன்னேன்.''

''அப்படியானால், என்னைப் பூரணமாக நம்புவீர்களா? நம்பி எனக்காக ஓர் உதவி செய்வீர்களா ?''

''என்னால் முடிகிற காரியம் எதுவாயிருந்தாலும் அதைச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்.''

''எனக்காகத் தாங்கள் காஞ்சிக்குப் போக வேண்டும்.''

''காசிக்குப் போகச் சொன்னாலும் போகிறேன்.''

''அவ்வளவு தூரம் போகவேண்டியதில்லை. காஞ்சியில் உள்ள இளவரசர் ஆதித்த கரிகாலருக்கு ஒரு நிருபம்



இது என்ன? விண்வெளியில் உள்ள வேறு ஓர் உலகிலிருந்து இறங்கிவந்த பறக்கும் தட்டா? சந்தேகம்தீர 44ம்பக்கம் பாருங்கள்.

கொடுப்பேன். அதை அவரிடம் சேர்ப்பிக்க வேண்டும். சேர்ப்பித்துவிட்டு அவரைத் தங்கள் கடம்பூர் அரண்மனைக்கு விருந்தாளியாக அழைக்க வேண்டும்....''

''தேவி! இது என்ன வார்த்தை சொல்கிறீர்கள்? தங்கள் கணவரும், என் தந்தையும், மற்றும் பல சோழ நாட்டுப் பிரமுகர்களும் இராஜ்யத்தைப் பற்றிச் செய்து வரும் ஏற்பாடு தங்களுக்குத் தெரியாதா?''

''நன்றாய்த் தெரியும். அதைவிட இன்னும் சில செய்திகளும் தெரியும். ஐயா! தங்கள் குடும்பமும் என் குடும்பமும் மற்றும் பல பெரிய குடும்பங்களும் பெரும் அபாயத்தின் வாசலில் நின்று வருகின்றன. அதற்குக் காரணம் யார் தெரியுமா?''

''சொல்லுங்கள், தேவி!''

''இன்று மத்தியானம் இங்கு விருந்தாளியாக வந்திருந்தாளே அந்தப் பாதகிதான்!''

''ஐயையோ! இளையபிராட்டியையா சொல்கிறீர்கள்?''

''அந்த நாகப் பாம்பைத்தான் சொல்கிறேன். பாம்பின் கால் பாம்பு அறியும். குந்தவையின் சூழ்ச்சி இந்த நந்தினிக்குத்தான் தெரியும். உம்முடைய சிநேகிதன் வந்தியத்தேவனை அவள் இலங்கைக்கு அனுப்பியிருக்கிறாள். எதற்காகத் தெரியுமா? மூலிகை கொண்டு வருவதற்கு என்பது பெரும் பொய்! சுந்தரசோழர் பிழைக்க வேண்டுமே என்று அவள் தவித்துக் கொண்டிருக்கவில்லை. அவருக்குப் பிறகு மதுராந்தகரும் பட்டத்துக்கு வரக்கூடாது; ஆதித்த கரிகாலரும் பட்டத்துக்கு வரக்கூடாது. அவளுடைய அருமைத் தம்பி அருள்மொழி வர்மன் வரவேண்டும் என்பது அவள் எண்ணம். அருள்மொழி வர்மன் பட்டத்துக்கு வந்தால் இவள் இஷ்டம் போல் ஆட்டி வைக்கலாம். அப்புறம் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி குந்தவை தேவிதான்; சக்கரவர்த்தி யார் தெரியுமா? உங்கள் சிநேகிதன் வந்தியத்தேவன்!....''

''ஆகா! அப்படியா? இதை எப்படியாவது தடுத்தே தீர வேண்டும். என் தந்தையிடமும் பழுவேட்டரையர்களிடமும் உடனே சொல்லவேண்டும்...''

''அவர்களிடம் சொல்லிப் பயன் இல்லை. அவர்கள் நம்ப மாட்டார்கள். குந்தவையின் தந்திரத்தை மாற்றுத் தந்திரத்தால் வெல்ல வேண்டும். நீர் உதவி செய்தால் வெல்லலாம்!''

''கட்டளையிடுங்கள், தேவி!''

''இதோ இந்த ஓலையைச் சர்வ ஜாக்கிரதையாகக் கொண்டு போய்க் காஞ்சியில் ஆதித்த கரிகாலரிடம் கொடுக்க வேண்டும். கொடுப்பீர்களா?'' என்று சொல்லிக் கொண்டே ஓலைச் சுருளையும் அதைப் போட வேண்டிய குழலையும் நீட்டினாள். மோக வெறியில் மூழ்கிப் போயிருந்த கந்தமாறன் ஓலைச் சுருளையும் குழலையும் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக நந்தினியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு, ''தங்களுக்காக எது வேண்டுமானாலும் செய்வேன்!'' என்று உளறினான்.

அச்சமயம் சடசடவென்று ஒரு சத்தம் கேட்டது. பழுவேட்டரையர் அரண்மனையிலிருந்து லதா மண்டபத்துக்கு வரும் பாதையில் விரைந்து வந்து கொண்டிருந்தார். திடீரென்று எதிர்பாராமல் வந்தவரைக் கண்டு, தாதிப் பெண் திடுக்கிட்டு விலகி நின்றாள். அங்கே மண்டபத்தின் விட்டத்திலிருந்து தொங்கி ஆடிய ஒரு முக்கோணத்தில் பெரிய கிளி ஒன்று சங்கிலியால் பிணைத்து வைக்கப்பட்டிருந்தது. வந்த வேகத்தில் பழுவேட்டரையர் தம்மை அறியாமல் அந்தக் கிளியைக் கையினால் பற்றினார். அவருடைய மனத்திலிருந்த வேகம் அவருடைய கையின் வழியாகப் பாய்ந்தது. கிளியின் இறகுகள் சடசட வென்று அடித்துக் கொண்டன. பழுவேட்டரையரின் கொடூரமான பிடியைத் தாங்க முடியாமல் கிளி 'கிறீச்'சிட்டது!

(தொடரும்)




**கலிஃபோர்னியாவிலிருந்து ஸ்ரீ ஒய். டி. தாத்தாச்சாரி எழுதிய கடிதத்திலிருந்தும் அவர் அனுப்பி வைத்த 'ஹூஸ்டன் போஸ்ட்' என்ற அமெரிக்கப் பத்திரிகை ஒன்றிலிருந்தும் சில பகுதிகளைக் கீழே தருகிறோம். படங்கள்: ஃபிலடெல்பியாவுக்குச் சுவாமி ரங்கநாதானந்தா வந்திருந்தபோது ஸ்ரீ டி. என். பாலா எடுத்தவை.** ★

அமெரிக்காவின் கலிஃபோர்னியா பகுதியில் சுவாமி ரங்கநாதானந்தா பத்து நாட்கள் தங்கியிருந்து பல நகரங்களில் மொத்தம் பதினொரு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். ''இருபதாம் நூற்றாண்டின் விஞ்ஞான உலகில் மனிதனின் ஆன்மீக வாழ்வு''; ''கடவுள் பற்று மூலம் மனித குல ஒற்றுமை''; ''இந்தியாவில் சம்பிரதாயமும் சமூக மாறுதல்களும்'' ''கடவுள் இறந்து விட்டாரா?'' என்பன போன்ற தலைப்புக்களில் அவர் ஆற்றிய உரைகளைக் கேட்க ஏராளமான அமெரிக்கர்கள் கூடியிருந்தார்கள். சாதாரணமாக இது போன்ற சொற்பொழிவுக்குச் சேரக் கூடிய கூட்டத்தை விட சுவாமிஜியின் அருளுரையைக் கேட்கக் குழுமிய கூட்டம் மிக அதிகம். அதோடு இந்தப் பகுதியில் அவர் இருந்த நாட்களில் விடாமல் மழை பெய்து கொண்டிருந்தது என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். எல்லாச் சொற்பொழிவுகளின் போதும் மக்கள் வெகு கவனமாகக் கேட்டார்கள் சுவாமிஜி பேசிக் கொண்டிருக்கையிலோ பேச்சு முடிந்த பிறகு தொடர்ந்து கேள்வி—பதில் நிகழ்ச்சியின்போதோ ஒரு நபர்கூட எழுந்து வெளியே போகவில்லை. ஒவ்வொரு சொற்பொழிவுக்குப் பிறகும் பலர் ஆர்வத்துடன் அவரிடம் கேள்விகள் கேட்டு ஒரு மணி நேரத்துக்கு மேல் அவரைத் தாமதிக்க வைத்தனர்.

வாழ்க்கையின் குறிக்கோளையும் அர்த்தத்தையும் இழந்து விட்டுப் பலர் பரிதவிக்கின்றனர். ஆன்மீக வளர்ச்சியும் இறையுணர்ச்சியும் மட்டுமே இவற்றைத் திரும்பட அடைவதற்குரிய சாதனங்கள் என்று சுவாமிஜி அறிவுறுத்தினார். உயிரினங்களின் தோற்றமும் வளர்ச்சியும் மனித உருவிலே முழுமையும் நேர்த்தியின் எல்லையையும் அடைந்திருப்பதால் இனி வளர்ச்சி என்பது ஆன்மிகத் துறையில்தான் ஏற்பட முடியும் என்றார்.

அவர் எங்கு சொற்பொழிவாற்றினாலும் சரி, விஷய ஞானமும் கருத்தாழமும் தெளிவும் மிக்க சரளமான பேச்சும், அதில் தொனித்த உண்மையும் நம்பிக்கையும் எல்லாரையும் கவர்ந்தன.

உல்லாசக் கேளிக்கைகள், படபடப்பு, மனச்சோர்வு மிகுதியாக உள்ள இன்றைய சமூகச் சூழலில் மனிதன் குறிக்கோளின்றி இயங்கித் தன்னைத்தானே இழந்து கொண்டிருக்கிறான். அவன் தன்னைத் தானே திரும்பப் பெற உதவக் கூடியது தியானமே என்றார் சுவாமி.

சொற்பொழிவுகள் இல்லாதபோது தனிப்பட்ட முறையில் பலருடன் அளவளாவினார் சுவாமிஜி. ஸ்டான்ஃபோர்டு பல்கலைக் கழகத்தில் உள்ள பல விஞ்ஞானிகளும், கிறிஸ்துவப் பாதிரிமார்களும், இன்னும் பல்வேறு அலுவல்களில் ஈடுபட்டுள்ளோரும் ஸ்வாமிஜியைச் சந்தித்து உரையாடினர். எல்லாருமே வேதாந்திகளாக உடனடியாக மாறிவிடப் போவதில்லைதான். என்றாலும் அனைவரும் ஒரு புதிய கருத்தை உணர்ந்து அதில் அக்கறையும் காட்டினார்கள். இப்படிப் பல உள்ளங்களைப் புரிந்து கொண்டு உறவாடும் வாய்ப்பைச் சுவாமிஜியும் வரவேற்று ரசித்தார்.

போதை தரும் மருந்துகளுக்கு அமெரிக்க இளைஞர் பலர் அடிமையாவதைக் கண்டு வருந்தினார் சுவாமிஜி. ஆன்மீக வளர்ச்சிக்கு இது ஒருபோதும் உதவாது. மாறாக அறிவை நசிக்கச் செய்யவே உதவும். உண்மையான மதம் உள்ளத்தை நிறைக்கும். அது முன் வாசல் வழியாக வரவேண்டும். கொல்லைப் பக்கமாக அல்ல என்றார் சுவாமிஜி.

சுவாமிஜி என்பதன் பொருள் என்ன என்று அவரிடம் கேட்டபோது அவர் கூறினார்: ''சுவாமி என்றால் எஜமானன் என்று அர்த்தம். தன்னைத் தானே அடக்கி ஆளும் எஜமானன்; பிறரை அல்ல!''



# ராமாயணம்



## ராஜாஜி

### 8. தாடகை

அன்றிரவு சரயூ நதிக்கரையில் முனிவரும் ராஜகுமாரர்களும் தரையில் படுத்துத் தூங்கினர்கள். படுப்பதற்குமுன் இரண்டு மந்திரங்களை விசுவாமித்திரர் உபதேசித்தார். 'பலம்' 'அதிபலம்' என்ற இரண்டு ரகசிய மந்திரங்களை உபதேசம் செய்துவிட்டு, ''இந்த மந்திரங்கள் ஜபித்தவனை எந்தத் திங்கும் அண்டாது'' என்று சொல்லி ராஜகுமாரர்களை ஆசிர்வதித்தார்.

அடுத்த நாள் காலை எழுந்து புறப்பட்டுப் போய் அங்க தேசத்தில் காமாசிரமத்தை அடைந்தார்கள். அங்கே தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகளுக்கு ராம லக்ஷ்மணர்களை அறிமுகம் செய்துவிட்டுக் காமாசிரமக் கதையைச் சொன்னுர் :

''இதுதான் சங்கர பகவான் நீண்ட காலம் தவம் செய்த இடம். மதியற்ற மன்மதன் சங்கரன் மேல் பாணம் விட்டு, பகவானுடைய கோபத்துக்கு ஆளாகி இந்த இடத்தில் எரிக்கப்பட்டான். அதனுல் இந்த இடம் காமாசிரமம் என்று பெயர் அடைந்தது.''

அன்று இரவு காமாசிரம ரிஷிகளுடைய அதிதிகளாக முனிவரும் ராஜகுமாரர்களும் தங்கினர்கள்.

காலையில் நித்திய கர்மங்களை முடித்துவிட்டுப் புறப்பட்டார்கள். கங்கைக் கரையை அடைந்ததும் அவ்விடத்திலுள்ள ரிஷிகள் அமைத்துத் தந்த ஓர் ஓடத்தில் ஏறிக் கொண்டு கங்கையைத் தாண்டிச் சென்றுர்கள்.

ஆற்றின் நடுவில் ஓடம் செல்லும்போது ஒருவிதப் பெருஞ் சத்தம் கேட்டு ராஜகுமாரர்கள், ''அது என்ன?'' என்று கேட்டார்கள். ''அது சரயூ நதியானது கங்கையில் பாய்ந்து சேருவதினுல் உண்டாகும் ஓசை'' என்று விளக்கினுர். அவ்விடத்தில் ராஜகுமாரர்கள் இரு புண்ணிய நதிகளையும் தியானித்து வணக்கம் செலுத்தினர்கள். பரம்பொருளைத் தியானிக்க ஆறும் மலையும் மரமும் மேகமும் பயன்படும்; எந்தப் பொருளும் பயன்படும். ஆயினும் தலைமுறை தலைமுறையாக மக்கள் பக்தி செலுத்தின நதியும், மூர்த்தியும், கோயிலும், குளமும் நம்முடைய உள்ளத்தை எளிதில் கடவுள் வழியில் செல்லச் செய்யும்.

கங்கையைத் தாண்டி நடந்து சென்றுர்கள். வழி ஒரு பயங்கரமான காட்டுக்குள் சென்றது. மரங்களும் புதர்களும் அடர்ந்து நுழைந்து போவதே மிகக் கஷ்டமாக இருந்தது. துஷ்ட மிருகங்களின் சத்தம் பயங்கரமாக இருந்தது.

ராம லக்ஷ்மணர்களுக்கு முனிவர் சொன்னுர் : ''இதுவே தாடகாவனம். இப்பொழுது பயங்கரக் காடாக இருக்கும் இந்த இடம், பூர்வத்தில் மிகச் செழிப்பும் செல்வமும் நிறைந்த தேசமாக இருந்தது. ஒரு காலத்தில் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று பிரம்மஹத்தி தோஷம் அடைந்தான். அதனுல் அகாதவனுகி மிக வருந்தினுன். தேவராஜனுகிய இந்திரனுடைய பாபத்தைப் போக்க தேவர்கள் எல்லாரும் சேர்ந்து மிகவும் சிரமப்பட்டார்கள். புண்ணிய நதிகளிலிருந்து பெரிய பாத்திரங்களில் ஜலம் கொண்டு வந்து அவனை ஸ்நானம் செய்வித்து மந்திரங்களினுல் பரிசுத்தப் படுத்தினுர்கள். அந்த ஸ்நான நீரினுல் அவனிடம் தங்கியிருந்த மாசு கழுவப்பட்டுப் பூமியில் சேர்ந்ததும் பூமியின் சக்தியால் அது ஜீரணிக்கப்பட்டு உரமாகி அந்தப் பிரதேசம் மிகச் செழிப்படைந்தது.

''எத்தகைய அழுகிப் போன, புழுத்துப் போன பொருளும் — பிரேதம், துர்க்கந்த மலம் உள்பட — பூமியில் புதைந்து விட்டால் மண்ணேடு மண்ணுகிப் போய்ப் பயன்பட்டு விடுகிறது. அதுவே புல்லும் செடியும் பழமும் கிழங்கும் அமிருதமும் போன்ற உணவுமாகிறது. இதுவே பூதேவியின் அருட் சக்தி.

''வெகு காலம் வரையில் இங்கே ஜனங்கள் சுகமாக இருந்தார்கள். பிறகு சுந்தன் என்கிற யக்ஷனுடைய மனைவியான தாடகையும் அவள் மகன் மாரீசனும் இந்தத் தேசத்தை நாசம் செய்து கோர வனமாக்கி விட்டார்கள். அவர்கள் இன்னும் இந்த வனத்தில் இருந்து கொண்டு வருகிறார்கள். உனக்கு மங்களம்.''

''பத்ரம்தே!''—அதாவது ''உனக்கு மங்களம்'' என்று ராமாயணத்தில் அடிக்கடி வரும். இது ஆசீர்வாத மொழி. பயம் அல்லது துக்கம் தரக் கூடிய விஷயத்தைச் சொல்லும்போது அன்புடன் இவ்விதம் காப்பு மொழியைச் சேர்த்துச் சொல்வது மரபு.

''அந்தத் தாடகைக்குப் பயந்து இங்கே யாரும் வருவதில்லை. அவள் ஆயிரம் யானை பலம் கொண்டவள். அவளுடைய உபத்திரவத்தைப் போக்கவே உன்னை அழைத்து வந்தேன். ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் இந்த அரக்கி உன்னால் கொல்லப்படுவாள்'' என்றார்.

தாடகையைப் பற்றி விசுவாமித்திரர் சொன்னதைக் கேட்ட ராமன், ''சுவாமி! தாடகை யக்ஷ ஸ்திரீ என்று சொன்னீர். யக்ஷர்களைப் பற்றி அவர்கள் இவ்வளவு தேக பலம் கொண்டவர்கள் என்று நான் கேள்விப் படவில்லையே? — யக்ஷர்களுக்குத் தேக பலம் ராக்ஷசர்களைப் போல் இல்லை என்று நான் இதுவரை எண்ணி வந்தேன். அதிலும் ஸ்திரீ ஒருத்திக்கு எவ்வாறு இத்தகைய பலம் உண்டாயிற்று?'' என்று கேட்டான்.

''நீ கேட்கும் கேள்வி பொருத்தமானதே. இதற்குக் காரணம் பிதாமகர் கொடுத்த வரமாகும். சுகேது என்ற யக்ஷன் இருந்தான். அவனுக்குச் சந்தானம் உண்டாகாமல் தவமிருந்து பிரம்மா அவனுடைய நன்னடத்தையையும் தவத்தையும் கண்டு திருப்தியடைந்து





வரம் தந்தார். 'அழகான ஒரு பெண் குழந்தை உனக்கு உண்டாவாள். அவள் வளர்ந்து ஆயிரம் யானைகளின் தேக பலம் அடைவாள். ஆனால், உனக்கு ஆண் சந்தானம் உண்டாகாது' என்று வரம் தந்தார்.

''அப்படியே அவனுக்கு ஒரு மகள் பிறந்தாள். அவள் தான் தாடகை. மிக சௌந்தரிய ரூபவதியான அவளைச் சுந்தன் என்ற யக்ஷனுக்குக் கொடுத்து விவாகமாயிற்று. அவர்களுக்கு மாரீசன் பிறந்தான்.

''ஒரு சமயம் அகஸ்தியருடைய கோபத்தினால் சாபம் அடைந்து சுந்தன் மரணம் அடைந்தான். இதனால் சுந்தனுடைய மனைவி தாடகையும் மகன் மாரீசனும் இருவரும் ரோஷங்கொண்டு அகஸ்தியரை எதிர்த்தார்கள். தேக பலத்தைக் கொண்டு எதிர்க்க வந்த அவர்களை அகஸ்திய முனிவர் சாபமிட்டார். அதன் பயனாக அவர்கள் நரமாமிசம் தின்னும் ராக்ஷசப் பிராணிகளாகி விட்டார்கள். தாடகையின் அழகு தீர்ந்து போய்க் கோரமான ராக்ஷச உருவமடைந்து விட்டாள்.

''தாடகையும் மாரீசனும் அகஸ்தியருடைய பிரதேசத்தில் இருக்கும் மக்களை அதுமுதற்கொண்டு இடைவிடாமல் இம்சித்து வருகிறார்கள். பெண்ணைக் கொல்லுவது க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதம் என்று நீ தயங்க வேண்டாம். இவளுடைய அக்கிரமங்களைப் பொறுக்க முடியாது. மிகக் குரூரமான அரக்கி. இத்தகையோரை அவர்கள் ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் தண்டிப்பது அரசர்களுடைய கடமை. அனைவருடைய க்ஷேமத்துக்காகக் காட்டு மிருகங்களைக் கொல்லுவது போல் இந்த அரக்கியைக் கொல்லுவது நியாயமேயாகும். ராஜ்ய பாரம் வகித்தவர்களுக்கு இது கடமையாகிறது. அதர்மத்தைச் செய்த பல மானிட ஸ்திரீகளுக்கும் இவ்வாறு மரணம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் நீ தயங்க வேண்டியதில்லை'' என்றார்.

எல்லாத் தேசங்களிலும் பெண்களைத் தண்டிக்க வேண்டி நேரிட்டாலும் மரண தண்டனை விதிக்கக் கூடாது என்கிற பழைய வழக்கம் உண்டு. ஆனால், எந்தப் பொது விதிக்கும் விலக்குகள் இருந்தே தீரும். இல்லாவிடில் பொது நன்மை நிலை பெறாது.

''குருவே, சபையில் எங்கள் தந்தை தாங்கள் சொல்லும்படி நடந்து கொள்ள வேண்டும் என்று ஆணையிட்டிருக்கிறார். உங்களுடைய சொற்படி மக்கள் க்ஷேமத்துக்காக இந்தத் தாடகையைக் கொல்வேன்'' என்று சொல்லிக் கோதண்டத்தை வளைத்து நாண் ஏற்றித் தோள் வரை நாணை இழுத்து ஒலி எழுப்பினான். அந்த ஒலி வனம் முழுதும் நிரம்பி, எட்டுத் திசைகளிலிருந்தும் எதிரொலி கிளம்பிற்று. வனத்திலுள்ள பிராணிகள் அனைத்தும் நடுங்கின.

தாடகை இந்தச் சப்தத்தைக் கேட்டு யாருக்கு இவ்வளவு தைரியம் என்று திகைத்தாள். பிறகு சப்தம் வந்த இடத்தைத் தேடி மகா கோபத்தோடு ராமன் மேல் பாய்ந்தாள்.

முதலில் கை கால்களை வெட்டிவிட்டு அங்கஹீனம் செய்தால் போதும் என்று ராமன் எண்ணி அவ்விதம் செய்யப் பார்த்தான். ஆனால், தாடகையின் பாய்ச்சல் அதிகரித்தது. இங்குமங்கும் சஞ்சரித்துக் கல்மாரி பொழிந்தாள். ராமனும் லக்ஷ்மணனும் அம்புகளைக் கொண்டு கல் மாரியைத் தடுத்து வந்தார்கள்.

யுத்தம் நடந்து கொண்டே இருந்தது. ''இவ்விதம் இது முடியாது. இரக்கம் காட்ட வேண்டாம்! மாலையாகி விட்டது; இருட்டினபின் அரக்கியின் பலம் அதிகமாகப் பெருகும். தாமதம் வேண்டாம்'' என்று முனிவர் எச்சரித்தார்.

அதன்மேல் அரக்கியைக் கொல்லுவதே சரி என்று ஒரு கொல்லும் அம்பை எய்தான். அது அரக்கியின் மார்பைத் துளைத்தது. அவளுடைய கோரமான பெருந் தேகம் உயிரற்றுப் பூமியில் வீழ்ந்தது.

தேவர்கள் ஆரவாரித்தார்கள். முனிவரும் அடங்கா மகிழ்ச்சியடைந்து சக்கரவர்த்தித் திருமகனை உச்சி மோந்து ஆசீர்வதித்தார்.

தாடகை இறந்து வீழ்ந்ததும் அந்த வனம் உடனே சாபம் நீங்கினதுபோல் மிக ரமணீயமாய் விளங்கிற்று. இரவு அரச குமாரர்கள் அங்கேயே கழித்தார்கள். அதிகாலையில் எழுந்து அனுஷ்டானங்கள் முடித்துக் கொண்டு மூவரும் அங்கிருந்து விசுவாமித்திரருடைய ஆசிரமத்துக்குச் சென்றார்கள். **(தொடரும்)**

## காட்சி - 4

காலை நேரம் : திருக்காட்டுப் பள்ளியில் மேரியின் காதலன் குறிப்பிட்ட டாக்டர் சரவணன் வீடு. அதன்முன் அறையிலே அவர் 'டிஸ்பென்சரி.'

மேஜைமேல் இரண்டு உண்டியல்கள் உள்ளன. ஒன்றில் ''மருந்துக்கு'' என்றும் இன்னொன்றில் ''அப்பன் முருகனுக்கு'' என்றும் எழுதியிருக்கிறது. எட்டணா வைத்தியர். வருகிற நோயாளிகள் ஒவ்வொரு உண்டியிலும் கால் ரூபாய் போடவேண்டும்.

வாழ்க்கையில் அளவுகடந்த இன்பத்தை அனுபவித்ததால் வாழ்க்கையே முருகனின் சித்து விளையாட்டு என்ற ஒரு பேரின்ப நிலையில் வாழ்பவர் டாக்டர் சரவணன். முருகனுடன் அடிக்கடி வாய் விட்டுப் பேசுவார். முருகனைக் கலந்தாலோசித்த பிறகே நோயாளியைக் கவனிப்பார்.

'அவர் ஒரு கத்தி தொடாத டாக்டர்.....கைராசி மட்டுமல்ல முருகனின் ஆசியையும் உடையவர்' என்ற நம்பிக்கை அவரிடம் வரும் நோயாளிகளுக்கு உண்டு.

திருப்புகழைப் பாடியபடியே வந்து முருகன் படத்தின்முன் நிற்கிறார் டாக்டர் சரவணன்.

**டாக்டர்:** முருகா...! எல்லாரும் சாவுக்குப் பயந்து, ''டாக்டர், நீங்கதான் காப்பாத்தணும்''னு என்கிட்ட வராங்க! ஆனால் நான், நீதான் சரணாகதின்னு உங்கிட்டே நிற்கிறேன். அப்பனே, என் கை 'ஸ்டெதாஸ்கோப்'பைவிடஉன் கை வேலுக்கு மதிப்பு அதிகம்! என்னை நீ காப்பாத்தணுமின்னு ஒரே ஒரு சின்ன வேண்டுகோள். என்கிட்டே வருகிற நோயாளிகளைக் காப்பாத்துப்பா. முருகா, நோயாளிகளைப் பார்க்கட்டுமா?

(மேஜைமுன் உட்கார்ந்து மணி அடிக்கிறார்.)

கம்பவுண்டர்! கம்பவுண்டர்! (ஏதோ நினைவு வந்தவர் போல் நாக்கைக் கடித்துக் கொண்டு) ஆமாம்! அவன்தான் காலையிலேயே கால் கடிதாசி கொடுத்துட்டுப் போயிட்டானே! சரி, நோயாளிகளை நானே கூப்பிடறேன். யாருப்பா... வாசல்லே யாராவது பேஷண்டு காத்துண்டு இருந்தா, உள்ளே வா!

(ஒருவர் வருகிறார். வழக்கமாகவே டாக்டரைக் காண வருபவர்தான்.)




# ஞான ஒளி?

கே. சுந்தரம்

**டாக்டர்:** அடேடே! நீங்களா? வாங்க, சௌக்கியமா?

**நோயாளி:** சௌக்கியமா இருந்தா ஏன் இங்கே வரப் போறேன்? டாக்டர்! நீங்க சொன்னப் போல் சென்னைக்குப் போனேன். பெரிய பெரிய டாக்டர்களை யெல்லாம் பார்த்தேன். எல்லாரும் எனக்கு வியாதி முத்திப் போச்சுன்னு கையை விரிச்சுட்டாங்க. இனிமே ஆறு மாசங்கூடத் தாங்காதுன்னுட்டாங்க!

**டாக்டர்** (கள்ளமில்லாத சந்தோஷத்துடன்): பலே... பலே... ரொம்ப நல்லதாப் போச்சு! திடீர்னு முன் அறிவிப்பு இல்லாமல் சாகிறதைவிட, நமக்கு இன்னும் ஆறு மாச வாழ்வுதான்னு முன்னுடியே தெரிஞ்சுக்கிறது நல்லதில்லையா? அதைச் சொன்னாங்களே, அதுக்காகவாவது அந்தப் பட்டணத்து டாக்டர்களைப் பாராட்டணும்.

**நோயாளி** (பீதியுடன்): டாக்டர்....

**டாக்டர்:** உண்மையைத்தான் சொல்றேன். எந்த வியாதியையும் மருந்து கொடுத்துக் குணப்படுத்தினால் மட்டும் பெரிய டாக்டரில்லே. பேஷண்டுக்கு நாள் கெடு வைக்கிறவங்கதான் பெரிய டாக்டர். இதோ, பாருப்பா! மனசைத் திடப்படுத்திக்க. எப்போ சாகப் போகிறோம்னு தெரிஞ்சுக்க முடியாததால்தான் மனுஷன் வாழ்கிற கடைசி நிமிஷம் வரைக்கும் தப்பு செய்து கிட்டே இருக்கான். ஆனால் உனக்கு அப்படியில்லையே. நீ ரொம்ப அதிர்ஷ்டசாலி உனக்கு வாழ்வு இன்னும் ஆறே மாசம். ஆறாவது மாசம் சாகப் போகிறோம் என்கிற ஞாபகம் சதா இருப்பதால் நீ இந்தக் கடைசிக் காலத்திலேயாவது தப்பு செய்யாமல் இருப்பாய். போ, போய்ப் போகிற

வழிக்குப் புண்ணியம் தேடு. நீ ரொம்பக் கொடுத்து வைச்சவன், அப்பா!

**நோயாளி :** ஆறு மாச வாழ்விலே நான் என்னங்க செய்ய முடியும்?

**டாக்டர் :** அந்த ஆறு மாசமும் ஆறுமுகத்தைப் பிரார்த்தனை பண்ணு. ஆறுபடை வீடுன்னு கேள்விப்பட்டிருக்கிறயா?

**நோயாளி:** எனக்கு ஆறுமுகப் படையாச்சி வீடு தாங்க தெரியும்!

**டாக்டர் :** அப்போ உனக்கு ஆறு மாசமே அதிகம்! ஆறே நாள் போதும்!

அப்பனே, ஆறுபடை வீடுங்கிறது என் அப்பன் முருகனுடைய ஆறு திவ்விய ஸ்தலங்கள். மனம் நொந்தவனுக்குக் குணம் தந்தருளும் கந்தனுடைய ஆறு திரு க்ஷேத்திரங்கள். ஒவ்வொரு வீட்டிலேயும் ஒரு மாசம் நிம்மதியாத் தங்கி அந்த வேல் முருகனை வேண்டிக்கொள். போ! இனி டாக்டர்களைத் தேடிக்கிட்டுப் போகாதே!




**நோயாளி** *(கலங்கி)*: அப்போ... என் வியாதிக்கு மருந்தே கிடையாதா?

**டாக்டர்:** மருந்து இருக்கு. ஆனா அது குணமிருக்குமா என்பதுதான் சந்தேகம். இப்போ நான் ஒரு மருந்து தருகிறேன். தெய்விகமானது. இந்தா...

(பழனி விபூதியைத் தருகிறார்)

நெற்றியிலே இட்டுக்க, தத்துவம் புரியும். சாம்பலா நினைச்சா சாம்பல். நம்பிக்கை வைச்சா அமிர்தம். வாயிலே போட்டுக்க. மந்திரமாவது நீறுன்னு பாடியிருக்கா.... சிறந்த மருந்தும் அதுதான். இது அவன் தருகிற மருந்து. எங்கே மனித சக்தி முடியுதோ, அங்கேதான் தெய்வ சக்தியை உணர முடியும்.

**நோயாளி :** அப்போ நான் பிழைக்கமாட்டேனு? என்னை எல்லாரும் கைவிட்டிட்டீங்களே!

**டாக்டர்** *(கீழே இருக்கும் பக்கெட்டிலிருந்து அவிழ்த்து எறியப்பட்ட ஒரு 'பாண்டேஜ்' துணியை எடுத்துக் காட்டியபடி)*: இது என்ன?

**நோயாளி:** 'பாண்டேஜ்' துணி!

**டாக்டர் :** காயம் பட்டா காயத்திலே மண் புகுந்து புரையோடிப் போகாமல் பாதுகாக்கிறதே, இந்தச்சின்னத் துணி! இது மட்டும் இல்லைன்னு உயிருக்கேகூட ஆபத்து வரலாம். ஆனால் இப்போ...? இதனோட நிலைமையைப் பார்த்தியா? காயம் ஆறிப் போனதும் அவிழ்த்துக் குப்பைத் தொட்டியிலே போட்டாச்சு.

**நோயாளி** *(அலட்சியமாக)*: பின்னே! இதைப் பிரேம் போட்டுக் கும்பிடவா முடியும்?

**டாக்டர்:** அதே பதில்தான் உனக்கும்! காயமே இது பொய்யடா! காற்றடைத்த பையடா! ஒரு பலூனை ஊதிக்கிட்டே போனப் பெரிசா வளருது. ஊசியை எடுத்து ஒரு ஓட்டை போட்டால்....?

**நோயாளி :** ஊதின காத்து ஓட்டை வழியாப் போயிடும்.

**டாக்டர்:** உனக்குக்கூடத் தெரிஞ்சிருக்கே.. இந்த உடம்புங்கிற பலூன் இத்தனை நாளா 'பஞ்சர்' ஆகாமல் இருக்கே. அதுவே அதிசயமில்லையா? பிறகு ஏன் அழறே? தீராது, குணமாகாதுன்னு தெரிஞ்சுட்டா அப்புறம் அதை அனுபவிச்சுத்தான் தீரணும். அழுதாலோ ஆத்திரப் பட்டாலோ பலன் இல்லை.

(நோயாளி வெளியே போகிறார். டாக்டர் முருகன் படத்திடம் சென்று நிற்கிறார்.)

குமரகுருபரனே! குணப்படுத்த முடியாத வனை அனுப்பிச் சோதனை பண்ணறியா! நான் என்கிற அகந்தை முத்திப் போய் நான் அவனுக்கு மருந்து கொடுப்பேன்னு நினைத்தாயா? நீ பார்த்து அனுப்ப வேண்டிய 'கேஸை' என்கிட்டே ஏனப்பா அனுப்பறே? (வாசல் பக்கம் திரும்பி) அடுத்தது யாரு?

(நல்லசிவமும் வெங்கிட்டுவும் வருகின்றனர்.)

**டாக்டர்:** உங்க உடம்புக்கென்ன?

**நல்லசிவம்:** ஒண்ணுமில்லையே!

**வெங்கிட்டு :** இனிமேத்தான் ஏதாவது வந்தா வரணும்!

**டாக்டர்** (முருகன் பக்கம் திரும்பி) : முருகா! இன்று முழுவதுமே உன் திருவிளையாடல் தொடருமா? உடம்பு சுகமாயிருக்கிறவனுக்குமா மருந்து கொடுத்து ஏமாற்றச் சொல்கிறாய்? (நல்லசிவம் வெங்கிட்டு பக்கம் திரும்பி) உடம்புக்கு ஒண்ணுமில்லை என்றால் என்னை ஏன் பார்க்கணும்?

**நல்லசிவம்:** எங்களுக்கு இல்லைன்னு அதோ, அந்த மூலையிலே உட்கார்ந்திருக்கானே அவனுக்கு ஏதாவது வந்திருக்காதா?

(மூலையில், நல்லசிவம் சுட்டிக்காட்டிய இடத்தில் உட்கார்ந்திருக்கிறான் அந்தோனி.)

**வெங்கிட்டு:** அதைப் பற்றி நாங்க தெரிஞ்சுக்கணும்.

**டாக்டர்:** அடுத்தவங்க வாழ்க்கையிலே அவ்வளவு அக்கறையா? அதுக்காகவா வந்தீங்க?

**நல்லசிவம்:** அதுக்காக மட்டும் தாங்க வரலே. (வெங்கிட்டுவைக் காட்டி) இவருடைய மாமனர் இந்த ஊரிலேதான் இருக்கார். அவரைப் பற்றி ஒரு மொட்டைக் கடுதாசு வந்துது. யார்ரா அவன்? எங்களுக்கே மொட்டைக் கடிதாசு எழுதறவன்னு தெரிஞ்சுக்கிறதுக்காக இந்த ஊருக்குக் கிளம்பினேம். பஸ்ஸிலே அவனைப் பார்த்தோம். எங்கேடா போறேன்னு கேட்டோம். திருக்காட்டுப் பள்ளிக்கு... டாக்டர் சரவணன் கிட்டேன்னு சொன்னன். ஐயோ, பாவம்! என்ன உடம்போ, எவ்வளவு நாள் தாங்குவானே? டாக்டர் சரவணன் கிட்டே போறனேன்னு ஒரு ஆதங்கத்திலே பின்னேடு வந்தோம்.

**வெங்கிட்டு:** என்ன யோசிக்கிறீங்க? இப்ப இருக்கிற டாக்டரைப் பற்றியா? நீங்க கவலைப்படாதீங்க. அவரை அங்கேயிருந்து கிளப்பறது எங்க பொறுப்பு. ரொம்ப சுலபம்.

**நல்லசிவம்:** ஒரு சின்ன மொட்டைக் கடிதாசுதான். அப்புறம் நீங்கதான் எங்க ஊர் டாக்டர்.

(நல்லசிவம் வெங்கிட்டுவுக்கு ஜாடை செய்ய வெங்கிட்டு வழக்கம்போல் அட்டைப் பெட்டியிலிருந்து ஏற்கெனவே பலருக்குப் போடப் பட்ட அதே சரிகை மாலையை எடுக்கிறன்.)

**நல்லசிவம்:** சொற்பொழி...சொற்பொழி!

**வெங்கிட்டு:** மாண்புமிகு மருத்துவரே...! உங்கள் சேவை எங்கள் ஊருக்குத் தேவை என்று கூறி வாழ்த்தி வருந்துகிறோம். மன்னிக்கணும். வரவேற்கிறோம்.

(நல்லசிவம் மாலையைப் போட, அவர் அதைக் கழற்றியதும் வெங்கிட்டு பெட்டியை நீட்டி அதைத் திரும்பவும் பெற்றுக் கொண்டு விடுகிறர்.)

**நல்லசிவம்:** இப்ப சொல்லுங்க. அவன் உட்கார்ந்திருக்கிற தோரணையைப் பார்த்து எத்தனை மாசம் தாங்குவான்னு....?




**வெங்கிட்டு:** ஏன் இவன் பேரிலே எங்களுக்கு இவ்வளவு அக்கறைன்னு, எங்க ஊரிலே யாராவது செத்துப் போனு குழி வெட்டி, கல்லறைப் பெட்டி பண்ணி, புதைக்கிறவனே அவன்தான். அவனே புதைபட்டுப் போயிடப் போருனே என்கிற கவலே.

**நல்லசிவம்:** அவனுலே அடிக்கடி உங்க கிட்டே வரச் சௌகரியப்படாது. ஒண்ணு செய்யுங்களேன். பேசாம 'நீங்க எங்க ஊர் பஞ்சாயத்து ஆஸ்பத்திரிக்கு டாக்டரா வந்துடுங்களேன்.

**வெங்கிட்டு:** சிக்கலான கேஸா? ஆறு மாசம்?

**நல்லசிவம்:** அஞ்சு மாசம்?

**வெங்கிட்டு:** மூணு?

**நல்லசிவம்:** ஒண்ணு?

**டாக்டர்** (உரக்க): முருகா! கெட்டவங்களே சம்ஹாரம் பண்ண அப்பப்போ ஆண்டவன் அவதாரம் எடுப்பாராமே! இப்போ வேளே வந்து விட்டது. அவதாரம் பண்ணுவியா? (நல்லசிவம், வெங்கிட்டுவைப் பார்த்து) இதோ பாருங்க! அவனைப் பார்த்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உடைமை பெரிதென்று இருப்போருக்கும் உண்மை பெரிது என்று இருப்போருக்கும் உள்ள போராட்டம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. தொன்று தொட்ட காலம் முதற்கொண்டே நடைபெற்று வருவது.

**— வில்லியம் ஜேம்ஸ்**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தால் இன்னும் நூறு வருஷம் நல்லா உயிரோட இருப்பான்னுதான் தோணுது. ஆனல் உங்க ரெண்டு பேரையும் பார்த்தாத்தான் எனக்குச் சந்தேகமா இருக்கு. வியாதி முற்றிப் போயிருக்கும்னு படுகிறது. உயில், கியில் எழுதிட வேண்டாமா? என் தம்பி பக்கத்துத் தெருவிலே வக்கிலா இருக்கான், கூப்பிடவா ?

**வெங்கிட்டு** (பயந்து போய்) : எங்களுக்கு என்ன டாக்டர்? கொஞ்சம் விவரமாத்தான் சொல்லுங்களேன்! (நல்லசிவத்தைக் காட்டி) இவருக்கு என்ன?

**நல்லசிவம்** (வெங்கிட்டுவைக் காட்டி) : பல பேருக்கு இவன் மொட்டைக் கடிதாசு போட்டான். இப்போ எமன்கிட்டேயிருந்து இவனுக்குக் கடிதாசு வந்துடுத்து !

(இருவருடைய வாயையும் அடைக்கத் தந்திரம் செய்த டாக்டர் இரண்டு தர்மாமீட்டர்களை எடுத்து ஒவ்வொருவர் வாயிலும் செருகி ஒரு மூலையில் உட்கார வைக்கிறார்.)

**டாக்டர்** (முருகன் படத்திடம்): பார்த்தியா முருகா ! சாவுக்குப் பயப்படற மனித சுபாவத்தை? சாவு நெருங்கிடுச்சுன்னு சொன்னல் போதும். பக்கத்திலே இருக்கிற எந்த டாக்டராயிருந்தாலும் போதும்னு ஓடுறுங்க. (அந்தோணியை அழைத்து) உன் உடம்புக்கு என்னப்பா ?

**அந்தோணி** : சற்று முன்னல் நீங்க சொன்னதுதாங்க !

**டாக்டர்**: என்னப்பா, சொல்லறே ?

**அந்தோணி**: எல்லாரும் சாவுக்குப் பயந்து டாக்டர்தான் காப்பாத்தணும்னு உங்க கிட்டே நம்பிக்கையோடே ஓடி வந்து தஞ்சம் புகுந்து விடறுங்க. நான்... நான்... (தயங்கி) என் மகனுடைய வாழ்வுக்குப் பயந்து நீங்கதான் கதின்னு உங்ககிட்டே ஓடி வந்திருக்கேங்க.... பிள்ளே இல்லேங்களா?

**டாக்டர்** : இல்லேயேப்பா! முப்பத்தைஞ்சு வருஷம் நான் நடத்தின இல்லறத்திலே அந்த ஒரு குறையைத்தான் முருகன் தீர்க்காமல் விட்டுட்டான் ! அதனுலேதான் அவனேயே பிள்ளேயா நான் நினைச்சு அவன் கிட்டே பேசறேன்.

**அந்தோணி** (திடுக்கிட்டு) : என்ன? அப்போ.... அவன் உங்க மகன் இல்லேயா?

**டாக்டர்**: எவன் ?

**அந்தோணி** (தன் கால்சராய்ப் பையிலிருந்து ஒரு சின்ன போட்டோவை எடுத்துக் காட்டி) : இந்தப் போட்டோவிலே இருப்பது உங்க பிள்ளை இல்லே...?

**டாக்டர்** (அர்த்தம் நிறைந்த சிரிப்புடன்): ம்.... கூட நிற்கிறது யாரு? உன் பெண்ணு ?

('ஆமா'மென்று அந்தோணி தலையசைக்கிறன்.)

**டாக்டர்**: அவன் என் மகன் இல்லேயப்பா! நான் மகனுத்தான் அவனை நடத்தினேன். என்கிட்டே வேலை செய்த கம்பவுண்டர்.

**அந்தோணி**: இப்போ அவன் எங்கே?

**டாக்டர்**: தினசரி என்னைத் தேடிக்கிட்டு வருகிறவங்களிலே அதிகப்படியான கேஸ்கள் இது மாதிரிதான். பொறுத்துப் பொறுத்துப் பார்த்துத் தாங்க முடியாமப் போனதாலே இன்னைக்குக் காலையிலே கூப்பிட்டு ரொம்பவும் கண்டிச்சுட்டேன். ''ஏன்டா, இப்படிப் பெண்கள் பாவத்துக்கு ஆளாகிறய்? நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செஞ்சுக்கிட்டுப் பொறுப்பா குடும்பம் நடத்துடா''ன்னு அழுத்தமாச் சொன்னேன். ''நீ யாரு என்னைக் கேட்க? உன் வேலையே வேணும், போய்யா''ன்னு வேலையை ராஜினுமாப் பண்ணிட்டுப் போயிட்டான்.

**அந்தோணி** (குமுறி): போயிட்டானு ?

**டாக்டர்**: ம்... போயிட்டான். பாவம், உன்னைப் பார்த்தால் பரிதாபமாத்தான் இருக்கு !

**அந்தோணி** (தன்மானம் மிகுதியாகப் பிரதிபலிக்க, அலட்சியமும் கோபமும் மிகுந்த தொனியில்): தஹ.... உங்களோட பரிதாபம் எனக்கு வேணுங்க. ஆயிரம் பேர் ஒண்ணு நின்னு என்னை வெறுத்தால்கூடத் தலை நிமிர்ந்து நடக்கிறவன் நான். அந்தச் சின்னப் பையனுலேயா அடுத்தவங்களோட அனுதாபத்துக்கு ஆளாயிடப் போறேன்! அவன் எங்கே தங்கியிருக்கிறது? விலாசத்தைக் கொடுங்க!

(டாக்டர் விலாசத்தை எழுதித் தருகிறர். அதை வாங்கிக் கொண்டு வெளியேறுகிறன் அந்தோணி. அந்தோணியின் சுபாவம் தெரிந்த நல்லசிவமும் வெங்கிட்டுவும் டாக்டரிடம் பேசத் துடிக்கின்றனர். கடைசியில் இருவரும் தர்மாமீட்டர்களை வாயிலிருந்து கையிலே எடுத்துக் கொண்டு பேசவே தொடங்கி விடுகின்றனர்.)

**நல்லசிவம்**: என்ன டாக்டர் ! அவன் கேட்டவுடனே விலாசத்தைக் கொடுத்துட்டீங்க. அய்யய்யோ !

**வெங்கிட்டு**: அவன் ஒரு மாதிரியானவன். ரொம்ப முரடன்! பொல்லாதவன். என்னவோ ஊசி போட்டுக்கச் சீட்டு எழுதித் தராப் போலே கம்பவுண்டர் இருக்கிற இடத்தை எழுதிக் கொடுத்திட்டீங்களே!

**டாக்டர்** : (அவர்கள் கையில் இருக்கும் தர்மா மீட்டரை வாங்கி): இதோ பார்த்தீங்களா ! இந்தத் தர்மாமீட்டரிலே ஜுரம் நூற்றி ஏழு டிகிரி வரைக்கும் பார்க்க முடியும். 104 டிகிரி வரைக்குமோ, இல்லே, 105ன்னு கூட டாக்டர் பிரயாசைப்பட்டால் காப்பாற்றி விடலாம். நூற்றி ஐந்தையும் தாண்டிட்டா முருகனுலேதான் காப்பாத்த முடியும். ஆனல் நூற்றிஏழுக்குமேலே போயிட்டா அந்த நோயாளியின் ஜுரத்தை அளக்கத் தர்மா மீட்டருக்கும் சக்தி இல்லே. ஆண்டவனுலும்கூட அவனைக் காப்பாற்ற முடியாது! இப்போ என் கம்பவுண்டரைப் பொறுத்த வரையிலே நூற்றி ஏழையும் தாண்டிட்ட நிலைமைதான் !

(தொடரும்)

# அம்புலிக்கு அப்பால்..

கதை: புஷ்பா

படம்: விஜயா. 5



























சுருண்டு விழுந்த பேராசிரியரை இரு நபர்கள் ஓர் அறைக்குத் தூக்கிக் கொண்டு சென்றார்கள்.








# தாபம் தீர்க்கும் திருக்குளம்

"எல்லாம் அவன் செயல்!"

"எதுவெல்லாம் அவன் செயல்?"

கேள்வி வியப்பில் ஆழ்ந்தியது; கண்கள் கேட்பவரை நோக்கின. அப் பார்வையில் உள்ள பிரமிப்பைப் புரிந்து கொண்டு அவரே பதில் கூறினார்:

"அவன் செயல் என்று நாம் செய்யும் ஒவ்வொரு நல்ல காரியத்துக்கும் தீய காரியத்துக்கும் அவன் மீதே பாரத்தைப் போட்டு விடக் கூடாது. நம்மைப் படைத்த அவன் நமக்குப் பகுத்தறிவை எதற்குத் தந்திருக்கிறான்? நல்லது எது, தீயது எது என்பதை உணர்ந்து செயல்படுவதற்காகத்தானே? அதை மறந்து நாம் தான்தோன்றித்தனமாகச் செயல்படுவது, அப்புறம் அதன் பலாபலனுக்கு ஏற்ப, அவன் மீது குற்றம் சுமத்துவது — இது நியாயமாகுமா?"

"..........."

"புரியவில்லையா? அப்படியானால் லௌகிகமான ஒரு திருஷ்டாந்தத்தைப் பார்ப்போம். ஒரு பையன் எஸ். எஸ். எல். சி. தேறியிருக்கிறான். தன் உத்தியோக விஷயமாக ஒரு பெரிய மனிதரை அணுகுகிறான். அவரும் அவன் மீது இரக்கம் கொண்டு, தம் செல்வாக்கை உபயோகித்து, ஐம்பது ரூபாய் சம்பளத்தில் ஓர் உத்தியோகம் வாங்கித் தருகிறார். அதோடு நீ நடந்து கொள்வதற்குத் தகுந்தபடி உனக்கு ஊதிய உயர்வும் கிடைக்கும் என்று சொல்கிறார். அவர் சொற்படி தன் மேலதிகாரிகளின் அன்புக்குப் பாத்திரமாகித் திருப்தியாக நடந்து கொண்டு, இருநூற்றைம்பது ரூபாய் ஊதிய உயர்வு பெறுகிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்போது எல்லாம் தங்கள் உதவியினால் நடந்தது என்று அந்தப் பெரிய மனிதரிடம் போய்ச் சொன்னால் அவருக்கும் திருப்தியாயிருக்கும்; கேட்பவர்களுக்கும் மகிழ்ச்சியாயிருக்கும். அதற்கு மாறாகத் தப்புத் தண்டாக் காரியங்களில் இறங்கி ஊதிய வெட்டுப் பெற்று இருபத்தைந்து ரூபாய் சம்பளமாகக் குறைந்துவிட்டால், அந்தப் பெரிய மனிதரைக் குறை கூற முடியுமா? எல்லாம் தங்கள் தயவுதான் என்று அவரிடம் போய்ச் சொன்னால் எப்படி இருக்கும்?

"...அந்த மாதிரிதான் ஆண்டவன் நம்மைப் படைத்து நல் வினைகள் மூலம் நம்மை உயருமாறு பணிக்கிறான். நாம் தீவினைகள் மூலம் தாழ்ந்தால் அதற்கு அவனா பிணை?"

எளிய சொற்களில் பெரிய விஷயத்தைப் பசுமரத்தாணியென மனத்தில் பதியும்படி கூறினார் ஸ்ரீ அஹோபில மடம் அழகியசிங்கர் அவர்கள்.

ஜீயர் சுவாமிகள், அப்பொழுது திருவள்ளூர் திருக்குளத் திருப்பணியைப் பார்வையிட்ட வண்ணம் நின்று கொண்டிருந்தார்கள்.

டாக்டர் ஸ்ரீஹரியோடு சென்றிருந்த நாங்கள் வணங்கி எழுந்தோம்.

"ஸ்ரீ ஹரியா?" என்று கேட்ட சுவாமிகள், 'அவகாஹ ஸ்நானம்' செய்யும்பொழுது அதாவது அமிழ்ந்து குளிக்கும்போது நாம் என்ன சொல்லி ஸ்நானம் செய்கிறோம்?" என்று ஒரு கேள்வியைப் போட்டார்.

"ஹரியின் பெயரைக் கூறுகிறோம்."

"ஸ்ரீ ஹரிஹரி என்கிறோம்.—ஸ்நானம் என்றால் உடல் நனைய முழுகுவதுதான் விசேஷம். இதை உத்தேசித்தே புஷ்கரணிகள் ஏற்பட்டிருக்கின்றன. வறட்சி காலத்திலும் குளங்களில் நீர் இருக்க வேண்டும். ஆனால் இப்பொழுதோ இந்தக் குளத்தில் நீர் அருகி விட்டது. மக்கள் மூழ்கி மகிழ வேண்டும், இதய தாபத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே இப்பணியில் பெரும் பங்கை ஸ்ரீ ஹரி ஏற்றிருக்கிறார் — ஆம், ஸ்ரீ ஹரியே ஏற்றிருக்கிறார்!" என்று இருபொருள் படக் கூறினார்கள் ஸ்வாமிகள்.

ஸ்ரீ ஹரி அவர்களோ பணிந்து — தம் பணிச் சுமையைச் சிறிதும் வெளியே காட்டிக் கொள்ளாமல் நின்றார்கள்.

சென்னைக்கு வடமேற்கே முப்பது மைல் தொலைவில் திருவள்ளூர் என்னும் புண்ணிய ஸ்தலம் இருக்கிறது. இங்கு வைத்திய வீரராகவப் பெருமாள் கனகவல்லித் தாயாருடன்

கொலு வீற்றிருக்கிறார். அருகிலேயே தீர்த்திகவரர் என்னும் ஈசன் கோயிலும் இருக்கிறது.

இக் கோயிலைச் சார்ந்த திருக் குளத்துக்கு ஹிருத் தாப நாசன புஷ்கரணி என்று பெயர்.

ஸ்ரீமந் நாராயணனே வீரராகவப் பெருமாளாக எழுந்தருளி தர்மசேனன் என்னும் மன்னனின் மகள் வசுமதியை மணந்து – பெண்ணைப் பற்றிய கவலையில் உழன்று கொண்டிருந்த அவன் இதய தாபத்தைப் போக்கியதாக ஸ்தல வரலாறு கூறுகிறது. தக்ஷ யக்ஞத்தில் தக்ஷப் பிரஜாபதியைக் கொன்ற தோஷம் ஸ்ரீ பரமேசுவரனைப் பிடிக்கிறது. இத்தலத்தில் தீர்த் திகவரராக அவதரித்து, சிவபெருமான் அந்த தோஷம் நீங்கப் பெறுகிறார்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பிரத்யும்ன மன்ன னின் பிள்ளையில்லாக் குறையைத் தீர்க்க இத்திருக் குளமே உதவுகிறது. இப்படியாகப் பலரது இதய தாபங்களையும் போக்கும் ஆற்றல் பெற்றிருப்பதா லேயே இதய நோயைத் தீர்க்கும் பொற்றாமரையாக இத்திருக்குளம் நாமம் பெற்றுள்ளது.

'எல்லோருக்கும் தண்ணென்ற நீர் வழங்கி வந்த குளம் நீரின்றித் தவிக்கக் கூடாது. இதன் தாபத் தையும் போக்க வேண்டும்' என்றென்றும் இது வற்றாத நீர்நிலையாகத் திகழ வேண்டும், என்ற பெரு நோக்கோடு இப்போது ஜீயர் சுவாமிகள் இத்திருப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

ஏறக்குறைய ஒன்பது ஏக்கர் நிலப் பரப்பைக் கொண்ட இத் திருக்குளத்தின் மையத்தில் நீராழி மண்டபம் நிமிர்ந்து நிற்கிறது. இப் பெருங்குளத்தை நீரால் நிரப்புவது என்பது இயலாத காரியம். எனவே, நீராழி மண்டபத்தை மையமாக்கி நாற்புற மும் 250 அடி அகல நீளத்துக்குச் சதுரமான குளம் செப்பனிடப்படுகிறது. பெரிய குளத்தைக் காட்டி லும் சிறிய குளம் ஐந்தடி ஆழத்தில் இருக்கும். கீழே காங்கிரீட் தளம், அதன் மேல் மணல், அந்த மணலில் தெள்ளிய நீர்—அதிகப்படியான நீர் மேலாக வழிந்து பெரிய குளத்தில் விழுந்து விடும்.

வான மழை பொய்த்தாலும் நிலமடந்தை சுரக் கும் நீரைப் பெரிய பம்பு செட் நிறுவி அதன் மூலம் இக்குளத்துக்குப் பாய்ச்சவும், அந்த நீர் என்றுமே ஐந்தடிக்குக் குறையாமல் இருக்கவும் திட்டம் தீட்டி யுள்ளார்கள் ஸ்ரீ சுவாமிகள்.

மாரிக் காலத்தில் நல்ல மழை பெய்து பெரிய குளமும் நீர் நிறையுமானால், அதனையும் தூய்மை யாக வைக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

'கருமமே கண்ணாக உள்ளவர்கள் கண் துஞ்சார், பசி நோக்கார்' என் னும் மூதுரையைப் பின்பற்றி ஜீயர் சுவாமிகள் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம ருடைய ஆராதனைகளையும் தம் நித் திய கர்மானுஷ்டானங்களையும் முடித் துக் கொண்டு, இந்தப் பணியை நேரிடையாகப் பார்வையிடத் தினந் தோறும் எழுந்தருளி விடுகிறார்கள்.

நாங்கள் சென்றிருந்தபோது சுவாமிகளின் பாதங்களில்பாதரட்சை இல்லை. மாலை வேளையானதால் இப் படியோ என்று எண்ணினோம். வெய் யில் காயும் நேரங்களில் கூட இதே நிலைதான் என்று கேட்டபொழுது சித்திரை வெய்யில் எங்கள் கால் களைப் பற்றினாற் போலிருந்தது.

மக்கள் படும் தண்ணீரில்லாக் கஷ்டத்தைக் காணச் சகியாமல்,





முதல் பக்கத்தில்: திருவள் ளூர் திருக்குளம் முழுத் தோற்றத்துடன் காட்சி தரு கிறது; ஸ்ரீ வீரராகவப் பெரு மாளின் கோபுரத்தையும் காணலாம்.

இந்தப் பக்கத்தில்: ஸ்ரீ ஜீயர் சுவாமிகள் கட்டிக் காட்டி வேலை வாங்கும் காட்சி.

பெரிய குளத்தில் சின்னக் குளம். பெரிய குளத்தைக் காட்டிலும் 5 அடி ஆழ முள்ள இக்குளத்தின் படித்துறை வேலை முன் னேறி வருகிறது.



ஸ்ரீ ஜீயர் சுவாமிகளின் அருமையான கருத்துக்களைப் பக்தர் குழாம் கைகட்டிக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

சுவாமிகள் மேற்கொண்டுள்ள தன்னேரில்லாப் பணியை என்னவென்பது? எத்தனையோ விதத்தில் புனிதம் பெற்றிருக்கும் இத் திருக்குளம் சுவாமிகளின் பணியினால் மேலும் புனிதமுறும் அழகை என்னவென்பது?

சுவாமிகள் ஒவ்வொரு காரியத்தையும் உன்னிப்பாகக் கவனித்து ஆலோசனை கூறி வருகிறார்கள்.

இந்த நாளில் கொத்து வேலை செய்பவர்கள் கல்லை நீரில் நனைத்து, சிமிண்டுக்கு நன்றாக நீர் ஊற்றி எங்கே நல்லபடியாக வேலை செய்கிறார்கள்?

இதைக் கண்ணுற்ற சுவாமிகள் வெகு நாசுக்காக, "அப்பா! இது காளவாயில் வெந்த கல் அப்பா! எனவே, நனைத்து வை! அதன் சூடும் தணியட்டும். இந்தக் குளம் பலருடைய தாபத்தை — சூட்டைத் தணிக்க வல்லது; பிறவிப் பிணியிலிருந்து விடுதலை வாங்கித் தருவது.

"நீ உன் கர்மாவினால் கொத்தன் ஆனாய். நீ உன் கடமையைச் சரிவரச் செய்தாயானால் இப்பிறவியிலேயே கடைத்தேறலாம். கடமை தவறினால் மறு பிறவி எடுத்தாக வேண்டும். கடமையைச் சரிவரச் செய்யக் கற்ற பின்னரே கடைத்தேற முடியும். உனக்கு இப்பொழுது அரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதைக் கைநழுவ விடலாகுமா?" என்றாராம்.

இப்படிப் பிறர் மனம் நோகாமல் பணிக்காகப் பணி வாங்கும் சுவாமிகள், இத் திருப்பணிக்காக அழகிய சிங்கரின் சொத்திலிருந்து ஒரு காசு எடுப்பதில்லை. வீரராகவப் பெருமானின் பணத்திலிருந்தும் பைசா எடுப்பதில்லை. அவ்வப்போது தம்மைத் தரிசிக்க வரும் பக்தர்கள் தரும் காணிக்கையைக் கொண்டே காரியங்களை நடத்துகிறார். இப்படி மக்களை அறப் பணியில் ஈடுபடுத்தும் சுவாமிகள் சிறு தொகையையும் எத்தனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறார்!

ஒருவர் பத்து ரூபாய் கொடுத்தால், 'ஒரு மூட்டை சிமிட்டிக்கு ஆயிற்று' என்று கூறி மகிழ்கிறார். ஒரு ரூபாய் கொடுத்தால் 'நாலு செங்கல் இவர் பெயரைக் கூறும்' என்று கணக்குப் பார்த்து வாழ்த்துகிறார்.

இத்திருப்பணிக்கு ஆயிரம் பதினாயிரம் என்று கொடுப்பவர்களும் இருக்கிறார்கள். அரை — கால் என்று கொடுத்துத் தாங்கள் பிறவி எடுத்த பயனைப் பெற்று விட்டதாக மகிழ்பவர்களும் இருக்கிறார்கள்.

திருக்குளப் பணியைப் பற்றிப் பேசினாலும் இடையிடையே சுவாமிகள் எத்தனையோ உயர்ந்த கருத்துக்களை உதிர்த்தார்கள். லௌகிக உலகையே உதாரணம் காட்டி லௌகிக உலகுக்கும் அப்பாற்பட்ட விஷயங்களை வெகு சுலபமாக விளங்க வைத்தார்கள்.

'இத்திருப்பணி முடிய எத்தனை காலம் பிடிக்கும்?' என்று கேட்க நினைத்தவேளையில், ஸ்ரீ ஹரி அவர்கள், நண்பர் ஒருவரைப் பற்றிக் குறிப்பிட்டு, 'அவர் உரிய காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்' என்றார்.

"ஆம். காலம்தான் எந்தக் காரியத்தையும் செய்கிறது. 'பருவத்தால் அன்றிப் பழா' என்று கூறுகிறோம். எந்த மரம் எப்பொழுது புஷ்பிக்க வேண்டும், எந்த எந்தப் பழங்கள் எப்பொழுது பழுக்க வேண்டும் என்பதைப் பருவம் தீர்மானிக்கிறதே யொழிய நாம் அல்ல. இளம் பிராயத்திலிருந்து முதுமைப் பிராயம் வரை, நரை, திரை, மூப்பு எல்லாம் காலத்தின் கோலம்தான். உலகமே காலத்தின் வசப்பட்டுத்தான் இருக்கிறது. உரிய காலத்தில் எதுவுமே நல்லபடி நடக்கும் என்று அவரிடம் சொல்லு!" என்றார்கள். திருக்குளத் திருப்பணியும் காலத்தில் நிறைவேறும் என்பதைச் சொல்லாமல் சொல்லிப் புரிய வைத்தார்களோ?

இப்படிக் காலத்தைப் பற்றிக் கூறிய சுவாமிகள், 'காலத்தினால் செய்த நன்றி

சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரி'தாகச் செய்த காரியங்கள் பலப்பல. பள்ளி உபாத்தியாயர் ஒருவர் தமது மகளுக்குத் திருமணம் நிச்சயம் செய்த பின், பண உதவி வேண்டி ஸ்ரீ சுவாமிகளை அணுகினார். அவர் கேட்டது சுவாமிகளின் ஆசியோடு இருபத்தைந்து ரூபாய்தான். ஆனால் சுவாமிகள் அவர் நிலையறிந்து ஒரு காரியம் செய்தார்கள். அந்த உபாத்தியாயர் உத்தியோகம் பார்க்கும் பள்ளிக்குச் சென்று மாணவர்களிடம், "நாலணாக் கொண்டு வாருங்கள் எனக்காக" என்றார்கள்.

மாணவர்கள் மகிழ்ச்சியுடன் அவர் கேட்ட தொகையைக் காணிக்கையாக அளித்தார்கள். அதை அப்படியே அந்த உபாத்தியாயரிடம் கொடுத்து, "யாசகம் செய்த தோஷம் உமக்கு இல்லை. யாரும் உம்மீது மாணவர்களிடம் பணம் வாங்கியதாகப் புகார் கூற முடியாது. இத்தொகையை எடுத்துச் சென்று உமது மகள் திருமணத்தை நன்றாக நடத்துங்கள்!" என்றார்.

அப்படி அவர் சிறுகச் சேர்த்த தொகை இருநூற்றைம்பது ரூபாய்க்கும் மேல் பெருகியிருந்தது.

பூர்வாசிரமத்தில் ஸ்ரீ ஜீயர் சுவாமிகளுக்கு மூக்கூர் ராஜகோபாலாச்சாரியார் என்று பெயர். கதா காலட்சேபம் செய்வதுண்டு; அதன் மூலம் பணமும் சம்பாதிப்பதுண்டு. ஆனால் ஒரு தம்பிடி கூடத் தம் சொந்த உபயோகத்துக்காக அல்ல. கல்யாணம் கார்த்திகை, உபநயனம், தேவாலயத் திருப்பணி போன்ற காரியங்களுக்குத்தான்.

"இவர் மகள் திருமணத்துக்கு இரண்டாயிரம் ரூபாய் தருவதாகச் சொல்லியிருக்கிறேன். ஆனால் என்னிடம் பணம் ஏது? என் காலட்சேபத்தின் மூலம்தான் சேர்த்துத் தர வேண்டும். இந்த ஊரில் இத்தனை கதைகள் செய்வதாயிருக்கிறேன். என் கதையைக் கேட்கும் கஷ்டத்திலிருந்து நீங்களும் தப்பி, அடுத்த ஊர்க்காரர்களும் தப்ப வேண்டுமென்றால், ஒரே கதையில் கொடுத்து விடுங்கள்! அப்புறம் அடுத்த கதை செய்ய நான் இந்த ஊரில் தங்க மாட்டேன்!" என்று நகைச்சுவை மிளிரப் பேசுவாராம். உத்தேசத் தொகை கிடைக்கும் வரை தாம் மேற்கொண்டுள்ள பணியிலிருந்து தளர மாட்டாராம்.

பம்பாய் செம்பூரில், இவருக்கு ஒரு பீடம் மூத்திய அழகிய சிங்கர் ஓர் இடத்தை வாங்கி மடம் கட்டத் திட்டமிட்டிருந்தாராம். அவர் காலத்தில் அது நிறைவேற வாய்ப்பில்லாமல் போய் விட்டது. அதற்கு வட்டியும் முதலுமாகச் சேர்த்து, இந்த அழகிய சிங்கர் மடத்தோடு கல்யாண மண்டபம், யாத்திரிகர்கள் விடுதி ஆகியவை கட்டியிருக்கிறார். அதோடு பம்பாய் மக்களின் விருப்பத்திற்கிணங்க ஸ்ரீ லக்ஷ்மி நாராயணப் பெருமானுக்கு ஒரு கோயிலும் எடுத்துள்ளார்.

இப்படி எடுத்த காரியம் யாவினும் வெற்றி கண்டு வரும் அழகியசிங்கரின் பேச்சில் லயித்திருந்த எங்களுக்கு நேரம் போனதே தெரியவில்லை. ஸ்ரீஹரி அவர்கள் பேச்சு வாக்கில், "இப்படி நான் பேசிக் கொண்டே யிருந்தால் ஸ்ரீஹரியை எல்லோரும் 'வாயாடி' என்பார்கள்!" என்றார்.

சுவாமிகள் சிரித்த முகத்தோடு, "சந்தேகம் என்ன? நீ வாயாடிதான். எழுதிக் கையெழுத்து வேண்டுமானாலும் போட்டுத் தருகிறேன்!" என்று ஒரு போடு போட்டார்கள்.

ஸ்ரீஹரியும் நாங்களும் சிரித்தோம்.

"வாயாடி என்ற சொல்லுக்குப் பொருள் தெரியுமா?" என்று கேட்டார் சுவாமிகள்.

'இதென்ன பெரிய வார்த்தை. பொருள் தெரியாமல் போக?' - இப்படித்தான் எங்கள் எண்ணம் ஓடியது.

"எவன் ஒருவன் வாய் ஓயாமல் வேதம் ஓதுகிறானோ, பகவன்நாமாவை இடையறாது ஜபிக்கிறானோ, அவனே வாயாடி. அத்தகைய வாயாடி என்று பெயர் பெறப் பாக்யம் செய்திருக்க வேண்டும்" என்றார்கள்.

அத்தகைய 'வாயாடி'யான ஜீயர் சுவாமிகளிடமிருந்து விடைபெற்றுத் திரும்பும் பொழுது, எங்கள் மனக் கண் முன்னே ஸ்ரீருத்தாப நாசனம் என்னும் பொய்கை, நிறைந்த நீருடன் மக்களின் தாபத்தைத் தீர்ப்பதாகக் காட்சி தந்தது. அந்த நன்னாளை விரைவில் காண வேண்டுமானால், அன்பர்கள் ஜீயர் சுவாமிகளின் பணிக்குக் கை கொடுத்து, பொருள் வழங்க நாட்கடத்தாமல் முன் வர வேண்டும். —ரா.வீ.

---



விடுமுறை வந்ததும் இயற்கை எழிலும் அமைதியும் நிரம்பிய இடத்துக்கு "விட்டோடு" உல்லாசப் பயணம் போவதுண்டு. இப்படி "விட்டோடு" என்றால் "குடும்பத்தோடு" என்றுதான் பொருள். ஆனால் மேற்கு ஜெர்மனியில் உல்லாசப் பயணம் போகக் கையோடு உண்மையான 'வீட்டை'யே தூக்கிக் கொண்டு போகத் தொடங்கி யிருக்கிறார்கள்! புதுமையான வடிவத்தில் தோற்றமளிக்கும் இந்த வீட்டைத் துண்டு துண்டாக்கி எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் சென்று விரும்பிய இடத்தில் திரும்பவும் இணைத்து வீடாக்கி விடலாம். நவீன வசதிகள் அத்தனையும் உள்ள இந்த வீட்டின் விலை எழுபத்தையாயிரம் ரூபாய். — யூ. பி. எஸ்.

## அத்தியாயம் 7

சின்னசிப்புதூரில் முற்பகல் பத்து மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரை நிலவிய நிசப்தமும், ரங்கராஜன் கண்ட மகா மௌனமும், ஐந்து மணிக்கு மேல் சின்னபின்னமாகிக் கலைந்துவிட்டது. ரேடியோவில் சினிமாப் பாட்டுக் கேட்கத் தொடங்கி விட்டது. எந்த வீட்டில் ரேடியோவைத் திருப்பினாலும் ஊரெல்லாம் கேட்டது. ஏழு எட்டு வீடுகளில் உள்ள வாலிபர்கள் டிரான்ஸிஸ்டரும் கையுமாகத் தெருவில் — நான்கே கடைகள்தான் — உட்கார்ந்து, டிரான்ஸிஸ்டர்களையும் தங்களையும் சேர்த்துக் காட்சிப் பொருளாக்கிக்கொண்டிருந்தார்கள். ஒரு கடையில் தினசரிப் பத்திரிகையின் போஸ்டர்கள் தொங்கின. ஊர் எல்லையில் இருந்த ஒரு பெரிய அரச மரத்தில் நாலுவிதக் கட்சிக் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. இத்தனை கோலாகலங்களுக்கு மிடையே, அழுக்கும் கந்தலும் சுற்றிக் கொண்டு மெலிந்த சரீரத்துடனும், பரட்டைத் தலையுடனும் பலர் நடமாடிக் கொண்டிருந்தார்கள்.



# தீராத விளையாட்டு

கு. அழகிரிசாமி

எவ்வளவு பெரிய ஊரு! அந்த ஊரிலே அஞ்சு கட்சின்னு, இங்கே ஏழு கட்சி! மரத்திலே பாரேன்! எத்தனை கொடிகள் பறக்குதுன்னு! 'குடிக்கிறது கூழு, கொப்பளிக்கிறது பன்னீரு' என்கிற கதையா, இங்கே வெறும் பயல்களெல்லாம் ஆளுக்கொரு ரேடியோவைத் தூக்கிக்கிட்டு அலையறதையும் பாரு! காடு கரைக்குப் போய் விவசாயம் பார்த்த காலமெல்லாம் போச்சு. இப்ப

அருணாசல முதலியார், ரங்கராஜன், அவர்களை வரவேற்று விருந்திடும் வீட்டுக்கார முதலியார் — மூவரும் வெளியே உலவக் கிளம்பினார்கள். ரேடியோக் கூச்சல்களையும் டிரான்ஸிஸ்டர் ஆசாமிகளையும், இந்தப் பகைப்புலத்தில் நடமாடும் ஏழைகளையும் பார்த்த ரங்கராஜனுக்கு அந்த நிமிஷம் வரையிலும் கிராமத்தின் மீது வளர்ந்து வந்த பற்றும் பாசமும் கருகத் தொடங்கி விட்டன. 'இத்தனை கோரங்களையும் இந்த ஊர் தன்னுள் வைத்துக் கொண்டிருக்கிறதா?' என்று மிரளவே செய்தான் ரங்கராஜன்.

''சித்தப்பா! இந்தக் கிராமமும் டவுன் மாதிரித்தானே இருக்கிறது!'' என்று ஆற்றாமையோடு சொன்னான்.

''டவுன் தேவல்லை ராஜா! இங்கேயுள்ள அல்காத்தனமும், பித்தலாட்டமும் உனக்கு என்ன தெரியும்? மதுரை

சினிமாப் பார்க்கவும், சினிமாப் பாட்டுக் கேட்கவும் நேரம் சரியா இருக்கு... ஒவ்வொண்ணு வித்துத் தொலைச்சிக்கிட்டு வெளிச்சம் போடுறாங்க...''

முதலியாரின் விமர்சனம் ரங்கராஜனின் கனவையும், காவிய நோக்கையும் அடியோடு சிதைத்து விட்டது.

பல வீடுகள் குட்டிச்சுவராக மாறியிருப்பதையும் பார்த்தான்.

அப்போது அருணாசல முதலியார் சொன்னார்: ''வீட்டைப் போட்டுட்டுப் போனவன் போயிட்டான். நிரம்பப் பேரு வீட்டை அடமானம் வச்சிருக்கிறான். நிலத்தையும் வித்துக்கிட்டு வர்றாங்க. தலைக்கு மேலே ஒவ்வொருத்தனும் கடன் வாங்கி யிருக்கிறான். ஊர் எங்கே உருப்படும்?''

இப்படி யெல்லாம் ஊர் அழிந்து கொண்டு வருவதற்கு சினிமாக்களும், அரசியல் கட்சிகளும், பொறுப்பற்ற

இளைஞர்களும்தான் காரணம் என்பது அவர் கட்சி.

ஆனால் வீட்டுக்கார முதலியார் ஒரு திருத்தம் கொண்டு வந்தார். ''கால மழைகளும் சரியாகப் பெய்கிற தில்லை.''

அவர் இவ்வாறு சொல்லவே, அருணாசல முதலியார், ''அது எங்கே பெய்யும்? இந்த விருதாப் பயல்களுக்கு மழை பெய்யுமா, இல்லை, மழை பெய்யலாமா?'' என்றார்.

அன்று மாலை உலாவப் போனதிலிருந்து ரங்கராஜன் கண்ணால் பார்த்ததும், காதால் கேட்டதும் சங்கடத்தையே உண்டுபண்ணியது. கடைசியில் கோவிலில் அந்தச் சினிமாப் போஸ்டரைப் பார்த்துத்தான் அவன் ஆறுதலும், இன்பானுபவமும் பெற முடிந்தது. அவர்கள் வண்டிப் பாதையில் நடந்து போய், பஸ் ஓடும் சாலையில் திரும்பி, ஒரு பாலத்தில் உட்கார்ந்திருந்து விட்டு இருட்டிய பிறகு வீடு திரும்பினார்கள்.

ரங்கராஜன் தன் தந்தையின் வீட்டைப் பார்க்க வேண்டும் என்று துடித்தும் நேரமில்லாததால் அங்கே போக முடியவில்லை.

இரவு அந்த உறவுக்கார முதலியார் வீட்டில் சாப்பிட்டு விட்டு, வந்த காரியம் பற்றிப் பேசலானார்கள்.

மதுரையிலேயே நிரந்தரமாகத் தங்கிவிட நடராஜ முதலியார் தீர்மானித்து விட்டதாலும், ரங்கராஜனும் அங்கேயே உத்தியோகம் பார்க்கப் போவதாலும் கிராமத்தில் உள்ள சொத்துக்களை விற்று விட முடிவு செய்து விட்டதாக அருணாசல முதலியார் அந்த வீட்டுக்கார முதலியாரிடம் தெரிவித்தார். இதைக் கேட்டதும் அவர் திடுக்கிட்ட மாதிரி விழித்தார்.

''நீங்கதான் முக்கால் வாசியை வித்துட்டுச் சாத்தூருக்குப் போயிட்டீங்க. பெரிய அத்தானாவது இங்கே வந்து இருக்கக் கூடாதா? இப்போதான் பென்ஷன் வாங்கிட்டாங்களே!'' என்றார் அவர்.

''வாஸ்தவம். ராஜாவை மதுரையிலே விட்டு விட்டு அவங்க மட்டும் இங்கே வந்து எப்படி இருப்பாங்க?''

''ராஜா தனியா இருப்பானேன்? காலா காலத்திலே கல்யாணம் பண்ணி வச்சிட வேண்டியதுதானே? நீங்க நினைச்சா நாளையே முகூர்த்தம்! நம்ப ராஜாவுக்குப் பெண் கேட்டு எந்த அரண்மனையிலும் கூசாமல் நுழையலாமே, அத்தான்! பொண்ணுக்கா பஞ்சம்! நம்ம ராஜா காலுக்கு ஆயிரம் தோளுக்கு ஆயிரம்!...''



ரங்கராஜன் ரசித்துச் சிரித்தான்.

அருணாசல முதலியார் சொன்னார்: ''இந்த வருஷம் கல்யாணத்தை நடத்திப்பிடுறதுன்னுதான் இருக்கிறேன். இதுவரையிலும் மூணு இடம் பார்த்தேன். முதல்லே பார்த்த இடம் இவன் வேண்டாம்னு சொல்லிட்டான். அப்

புறம் ஓர் இடம்.... அதுவும் நல்ல இடம்தான்... பொண்ணு கறுப்புன்னு இவன் தங்கச்சி தடுத்துப்பிட்டா... அப்படி இருக்கு... கல்யாணத்தைப் பத்தி ஒண்ணுமில்லே. நீங்க சொன்னாப்லே, நாளைக்கே முகூர்த்தம் வைக்க முடியும். அம்பாசமுத்திரம் பக்கத்திலே ரொம்பப் பெரிய இடமாகக் குறிச்சு வச்சிருக்கிறேன்.... அதைப் பிறகு | பேசுவோம். இப்போ இந்தக் காடு கரையை வித்துடறதுதான் நல்லது. இங்கே ஒழுங்கா வெள்ளாமை பண்ணறது கிடையாது. குத்தகைக்காரன்கிட்டே நம்மாலே மல்லுக்கட்ட முடியாது. இவனோட அப்பா வந்து வெள்ளாமை எங்கே பண்ணப் போறார்? அவருக்கு இந்தச் சங்கதியே தெரியாது. நேத்துப் பிறந்த பயல் கூட அவரை லேசா ஏமாத்திப்பிடுவான்... அத்தோடே அவர் ராஜாவை விட்டுட்டு இங்கே வந்து இருக்கவும் மாட்டார். இவனை மதுரையிலே காலேஜிலே கொண்டு போய்ச் சேர்த்துட்டு நானும், அவரும் சாத்தூருக்கு வந்தப்போ, அவர் அழுத அழுகை எனக்குத் தெரியும். மூணு நாள் அவரும், எங்க அண்ணியும், ஒருத்தர் முகத்தைப் பார்த்தாலே அழுதுக்கிட்டு இருந்தாங்க. அப்படி உசிரையே வச்சிருக்கிறப்போ சன்னு சிப்புதூருக்கு வான்னு



# சொல்லுங்கள், பார்ப்போம், நான் அணியப்போவது என்ன?




## லக்மே டால்கம்

இலேசு. இணைபிரியாதது. எழில்மிக்கது. லக்மே டால்கம். அணைந்திடும் நறுமணங்கள் ஐவகை: லேவெண்டர், வெட்டிவேர், நிர்வாண், சந்தனம்; மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருபவை. தவிர, பூரிக்கவைக்கும் மற்றுமொரு புதுமணம்—ஃப்ளோரல் மிஸ்ட்—பெரிய ஃபேமிலிசைஸில் வருகிறது. எல்லாமே உங்கள் கைக்கெட்டிய விலையம் உடையவை.

Lakmé

வருவாங்களா? அதெல்லாம் நடக்காத காரியம்....''

அப்போது ரங்கராஜன், ''சித்தப்பா, நானும் இங்கேயே வந்துடறேனே!'' என்று விளையாட்டாகச் சொன்னான்.

''நீ இங்கே வரப் போறயா? பேஷ், பேஷ்! இங்கே பட்டிக்காட்டிலே கிடக்கணும் என்கிறதுக்காகத்தான் உன்னை இவ்வளவு பெரிய படிப்புப் படிக்கவச்சது! பைத்தியக்காரப் பிள்ளே, போ. கேட்டிங்களா அத்தான், நம்ப புத்திரச் செல்வம் பேசுறதை!'' என்று அவர் எகத்தாளமாகச் சொன்னார்.

அன்றிரவு பிறுங்கு சுப்பையாவையும் வரவழைத்தார்கள். நள்ளிரவு வரையிலும் பேசினார்கள்.

நடராஜ முதலியாருக்கு அவ்வூரில் இருந்த சொத்துக்கள்: ஒரு பெரிய வீடு, சுமார் நூறு ஏக்கர் கரிசல் நிலம், ஐந்து ஏக்கர் மிளகாய்த் தோட்டம், சுமார் நூறு பனைமரங்கள். இவ்வளவையும் விலைக்கு வாங்கப் பிறுங்கு சுப்பையாவிடம் பணம் இல்லை. ஐம்பது அறுபதினாயிரத்துக்கு வாங்க முடிந்ததை வாங்கவே அவன் தயாராக இருந்தான். ரங்கராஜனும் அனைத்தையும் விற்றுவிட இசையவில்லை. வீட்டை விற்கவே வேண்டாம் என்று சொன்னான். இதைக் கேட்டு அருணாசல முதலியார் சிரித்தார். நிலங்கள் இருந்தாலாவது ஒன்றுக்குப் பாதியாகவேணும் வருமானம் வரும். வீடு இருந்து என்ன பயன்? பத்து ரூபாய் வாடகைக்காகவா வைத்துக் கொண்டிருப்பது? இப்படியெல்லாம் அவர் கேட்டார். ரங்கராஜன், ''இப்போ வேண்டாம். பின்னாலே வேணும்னு வித்துக்கிறது சித்தப்பா!'' என்றான். இப்படி அவன் மதுரையிலும் அவரிடம் சொன்னான்; சாத்தூருக்கு வந்தும் சொன்னான். இங்கேயும் சொன்னான்.

இறுதியில் பிறுங்கு சுப்பையாவுக்கு இருபது ஏக்கர் கரிசல் நிலங்களையும் தோட்டத்தையும் விற்றுவிடத் தீர்மானமாயிற்று. எந்தத் தேதியில் வேண்டுமானாலும் கிரயப் பத்திரம் எழுதி ரிஜிஸ்தர் செய்யலாம் என்று அவன் சொன்னான். அவ்வளவில் பேச்சை முடித்துக் கொண்டு தூங்கப் போனார்கள்.

மறுநாள் விடிந்ததும் அருணாசல முதலியார் சாத்தூருக்குப் புறப்பட்டார். வீட்டுக்கார முதலியார் ஒரு நாளாவது தங்கிச் செல்ல வேண்டும் என்று வற்புறுத்தினார். சாத்தூரில் அவசர வேலை இருக்கிறது என்றும், அன்றே மதுரைக்கு வேறு போக வேண்டும் என்றும் சொல்லி விட்டார் அருணாசல முதலியார்.

''அப்படின்னா ராஜாவாவது நாலு நாள் இங்கே இருந்துவிட்டு வரட்டும். வந்த காலோடே அனுப்பி வைக்க எனக்கு மனம் வரமாட்டேங்குது, அத்தான்!'' என்று சொல்லித் தமது கோரிக்கையை அழுத்தமாக வற்புறுத்தவும் செய்தார் அவர்.

''அது எப்படி? ராஜா தனியா எப்படி இருப்பான்? இவன் இங்கே இருக்கத் தயாராய் இருந்தாலும் அங்கே எங்க அண்ணனும் அண்ணியும் இவனை விட்டுட்டு இருக்கணுமே!''

''என்ன அத்தான், நீங்க சொல்றது? ராஜா என்ன சின்னக் குழந்தையா?''

அவர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ''சித்தப்பா! நான் இருந்துட்டு வர்றேன்'' என்று சொன்னான் ரங்கராஜன்.

''என்ன, என்ன விளையாட்டுப் பண்ணறே?'' என்று சித்தப்பா ஆச்சரியத்தோடு கேட்டார்.

''ராஜா இருந்தாலும் நீங்க விடமாட்டீங்க போலிருக்கே!'' என்றார் வீட்டுக்கார முதலியார்.

''சித்தப்பா, நிஜம்மாச் சொல்றேன். நாலு நாட்கள் இல்லாட்டாலும் ரெண்டு நாளாவது இருந்துட்டு வர்றேன்'' என்றான் அவன்.

கடைசியில் அருணாசல முதலியார் இணங்கினார்.

''ரெண்டு நாளிலே சாத்தூருக்கு வந்துடு. ரெண்டு பேருமா மதுரைக்குப் போவோம். உன்னை இங்கே விட்டுட்டு நான் மதுரைக்குப் போனால், உங்க அப்பாவுக்குப் பதில் சொல்ல முடியாது'' என்று சொல்லி விட்டு அருணாசல முதலியார் பயணமானார்.

வழி அனுப்புவதற்கு உள்ளூர் முதலியாரும் ரங்கராஜனும் கூடவே சென்றார்கள்.

## அத்தியாயம் 7

சித்தப்பாவை அனுப்பி விட்டு அந்த ஊரில் அவன் தங்கியிருக்க முடிவு செய்ததற்குப் பல காரணங்களைச் சொல்லலாம் என்றாலும், ஒரு நாளாவது இருந்து விட்டுத்தான் போக வேண்டுமென்று பொதுப்படையாக ஓர் ஆசை தோன்றியதைத்தான் முக்கியமான காரணமாகச் சொல்ல வேண்டும். பெரும்பாலான நேரமும் அவ்வூரில் நிலவியிருந்த அமைதி அவனுக்



''தாங்ஸ்! எங்கள் ஆபீஸ் வந்து விட்டது. மறுபடியும் சாயங்காலம் ஐந்து மணிக்கு வருகிறீர்களா?''

குப் பிடித்திருந்தது. தன் தந்தையின் பூர்வீக வீட்டைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. உற்றாரும் மற்றாரும் தன் தாயாரைப் பற்றிப் பெருமையோடு சொல்லும் ஒவ்வொரு செய்தியையும் மேன்மேலும் கேட்டு மகிழ வேண்டும் என்ற விருப்பமும் மேலிட்டது.

காலை பத்து மணிக்கெல்லாம் மாடசாமி தன் மூத்த மகள் ஜானகியையும் — அவளுக்கு இருபது வயதிருக்கும் — மனைவியையும், இரண்டு பையன்களையும் அழைத்துக் கொண்டு ரங்கராஜனிடம் வந்தான். அவனுக்கு ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தினான். கடைசியில் அவனுக்கு ஒரு வேண்டுகோளும் விடுத்தான் :

''சின்ன மொதலாளி! நீங்க எல்லாரும் மறுபடியும் இங்கேயே வந்து, இந்த ஊரிலேயே இருக்கணும். நம்ப வீட்டிலே அம்மா வந்து விளக்கேத்தணும். தொழுவத்திலே பத்துக் கண்ணுக்குட்டியாவது வால் வீசணும். இவ்வளவு பெரிய வீட்டையும் பண்ணையையும் அத்தாந்திரமா விட்டுட்டு மதுரையிலே போய் இருக்க எப்படித்தான் அம்மாவுக்கு மனசு வந்ததோ ?''

ரங்கராஜன் சிரித்தான் — சொத்துக்களை விற்கத் தொடங்கியபின், மாடசாமி இப்படி யோசனை சொல்கிறானே என்று!

கிராம வாழ்க்கை அந்தக் காலத்தைப் போல் இப்போது இல்லை என்றும், மனிதர்கள் எப்படி எப்படியோ மாறி விட்டார்கள் என்றும், இன்றைய நிலையில் நகரத்தில் வாழ்வதுதான் நிம்மதி என்றும் மனசில் நினைத்தோ நினைக்காமலோ நுனி நாக்கால் சொன்னான் ரங்கராஜன்.

மாடசாமியோ நகரங்களைப் பழிக்கத் தொடங்கி விட்டான். கிராமங்கள் இந்த அளவுக்குக் கெட்டதும் நகரங்களினால்தான் என்று அடித்துச் சொன்னான். நகரங்களில் என்னதான் வசதிகள் இருந்தாலும், வாழையடி வாழையாக வாழ்ந்த மண்ணில் வாழ்வது போல் ஒரு திருப்தி ஏற்படவே ஏற்படாது என்றும் கூறினான்.

ரங்கராஜன் அதற்கும் சிரித்துக் கொண்டான்.

அவன் கேட்டுக் கொண்டபடியே, அவனைப் பூர்வீக வீட்டுக்கு மாடசாமி அழைத்துச் சென்றான்.

அப்பொழுது அங்கே வாடகைக்குக் குடியிருந்த வாத்தியாரம்மாளும் இல்லை; கிராம சேவிகையும் இல்லை. தத்தம் உத்தியோக ஸ்தலங்களுக்குப் போயிருந்தார்கள். அந்த இருவரையும் தம் பொறுப்பில் உள் — வாடகைக்குக் குடி வைத்திருந்த உறவுக்கார முதலியாரின் மனைவி மக்கள்தான் இருந்தார்கள். அந்த முதலியார் அப்பொழுது எங்கோ வெளியே போயிருந்தார்.

குடியிருந்த குடும்பத் தலைவி ரங்கராஜனை இன்னார் என்று தெரிந்து கொண்டு பணிவும் வணக்கமுமாக வரவேற்றாள்.

ரங்கராஜன் வீட்டின் ஒவ்வொரு பகுதியையும் — பூட்டிக் கிடந்த இரண்டு குடித்தனப் பகுதிகளைத் தவிர — பார்த்தான். மொட்டை மாடிக்கும் போய் அந்த வெய்யிலில் சிறிது நேரம் நின்றான். கொல்லையில் உள்ள முருங்கை மரங்களையும் பார்த்தான். அந்தப் பெரிய வீட்டைச் சுற்றி அதைப் போல இன்னும் மூன்று வீடுகள் கட்டுவதற்குப் போதுமான காலி இடம் கிடந்தது. காலியாகக் கிடக்கும் மாட்டுத் தொழுவத்தை அவனுக்குக் காட்டி மற்றொரு முறையும் பிரலாபித்தான் மாடசாமி.

''இந்த வீட்டை வித்துடலாம்னு சித்தப்பா சொல்லிட்டுப் போயிருக்கிறார்'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான் ரங்கராஜன்.

அதை மாடசாமியினால் தாங்கவே முடியவில்லை. பயபீதியுடன் ஓலமிடுகிறவனைப் போல், ''மொதலாளி! என்ன சொல்றீக மொதலாளி! நெசமாத்தான் சொல்றீகளா?'' என்று கூப்பாடு போட்டான்.

அவனுடைய அதிர்ச்சியைக் கண்ட ரங்கராஜனுக்குத் திரும்பவும் சிரிப்புத்தான் வந்தது.

''அப்படி ஒரு யோசனை சொல்கிறார் அவர். ஆனால், இனிமேல்தான் பேசி முடிவு செய்யணும்'' என்று அவன் சொன்னது மாடசாமிக்குப் பாதி உயிரைக் கொடுத்தது.

''எத்தனை லட்சம் வந்தாலும் சரி, இந்த வீட்டைமட்டும் விற்கவேண்டாம்.

# இப்பொழுது!

# 12 நாட்களில் வெண்மை பளிச்சிடும் பற்கள்!

சக்தி வாய்ந்த புதிய
செய்முறை.
பனிரெண்டே நாட்களில்
பற்களுக்கு அதி
வெண்மையையும்
ஆரோக்கியத்தையும்
அளிக்கிறது






| புதிய செய்முறை | புதிய சுவை | புதிய பேக் |
|---|---|---|

இந்தப் படியைப் பார்த்தா, அந்தத் தொழுவத்தைப் பார்த்தா, எதைப் பார்த்தாலும் எனக்கு அந்த மகராசி ஞாபகம் வருது மொதலாளி. அம்மா இப்படி வந்து வாசலிலே நின்னு, 'வாப்பா மாடசாமி'ன்னு சொல்றது இன்னும் என் கண்ணுக்குள்ளேயே இருக்கு....''

ரங்கராஜனும் அப்போது உணர்ச்சி வசப்படத் தொடங்கி விட்டான்.

''சரி, வா, போவோம்'' என்று மாடசாமியை அழைத்துக் கொண்டு வெளியே வந்தான். அந்த வீட்டை விற்றுவிடுவதற்கு அவனுக்கும் மனம் துணியவில்லை.

**மா**லையில் உலாவக் கிளம்பினான் ரங்கராஜன். மாடசாமியும் கூட வந்தான்.

வடக்குத் தெருவுக்கு வந்து வண்டிப் பாதையை நோக்கித் திரும்பும் இடத்தில் ஒரு சிறு கூரை வீட்டின் வாசற்படியில் ஒரு வெள்ளைச் சேலைக்காரி நிற்பதை ரங்கராஜன் பார்த்தான். அவளுக்குப் பக்கத்தில் ஒரு பன்னிரண்டு வயதுப் பையன் நின்று கொண்டிருந்தான்.

ரங்கராஜனுக்கு மட்டும் கேட்கும்படியாக மாடசாமி வாய்க்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டு சொன்னான்:

''மொதலாளி, அந்தா நிக்கிறாளே, அவ யாரு தெரியுமா?''

ரங்கராஜன் திரும்பிப் பார்த்துவிட்டு, ''தெரியல்லியே! எனக்கு எப்படித் தெரியும்?'' என்றான்.

''நல்லாப் பார்த்துக்குங்க. அந்தப் பக்கம் போய்ச் சொல்றேன்'' என்று அவன் சொல்லவே, அவனும் அவளை நன்றாகப் பார்த்து முடித்துக் கொண்டான். ஏதோ ஒரு ரசமான கதையைக் கேட்கப் போகிறோம் என்ற ஆவலோடு நடந்து சென்றான் ரங்கராஜன்.

கொஞ்ச தூரம் சென்றதும் மாடசாமி, ''மொதலாளி, ஆள் எப்படி இருக்கிறான்னு பார்த்திஹளா?'' என்று ஆரம்பித்தான்.

''ஆள் நல்லாத்தான் இருக்கிறாள்!''

''இப்பவே இப்படிச் சொல்றீஹ. போன வருசம் பார்த்திருந்தா என்ன சொல்லியிருக்க மாட்டீஹ? இலுமிச்சம் பழம்னு இலுமிச்சம் பழமா இருப்பா. சுண்டுனா ரத்தம் வந்துடும். இப்போ இந்தக் கரிசக்காட்டிலே இந்த வெயிலிலே அலைஞ்சி கறுத்துப் போயிட்டா.''

''இப்பவும் சிவப்பாத்தான் இருக்கிறா!''

''இது என்ன செகப்பு? முதலாளி இவளுக்கு வயசு என்ன ஆச்சு தெரியுமா? முப்பத்தெட்டு!''

''முப்பத்தெட்டா?''

''முப்பத்தெட்டு! நான் சொல்றேனே! பார்த்தா இருபத்தஞ்சுன்னுதான் யாரும் சொல்லுவாங்க. அஞ்சி பிள்ளை பெத்த பிறகும் இப்படி இருக்கிறா...''

''அஞ்சு பிள்ளை இருக்கா?''

''அஞ்சி பிள்ளை. மூத்த மகள் கல்யாணத்துக்கு நிக்கிறா!... அது ஒரு பக்கம் இருக்கட்டும். நான் எதுக்குச் சொல்ல வந்தேன்னா, ஒலகம் எப்படிக் கெட்டுப் போச்சு என்கிறதுக்காகவில்ல சொல்ல வந்தேன். நாட்டிலே பஞ்சம் பஞ்சம் என்கிறாங்களே, பஞ்சம் ஏன் வராதுன்னு கேட்கிறேன்...''

''சமாசாரத்தைச் சொல்லு மாடசாமி!''

''மொதலாளி! இவ புருஷன்தான் போன வருசம் சாத்தூர் ஆத்துப் பாலத்துலே ரயிலுக்கு முன்னாலே விழுந்து செத்தவன். சரியா ஏழு மாசமாச்சி. அவன் மண்டையைப் போட்டு...''

''எதுக்கு அப்படிப் பண்ணிக்கிட்டான், மாடசாமி?''

''ஹூம்! என்னத்தைச் சொல்றது? இவ நடத்தையைச் சகிக்காமல் உசுரை மாச்சிக்கிட்டான்னு பாதிப் பேர் சொல்றாங்க. அதெல்லாம் இல்லே, கடன் சுமை தாளாமல் ரயிலுக்கு முன்னாலே போய்ப் பாஞ்சிட்டான்னு பாதிப் பேர் சொல்றாங்க. என்னைக் கேட்டா ரெண்டுமே நெசந்தான்னு சொல்வேன். ஆனா, அந்த முட்டாப் பயல் இவ நடத்தையைக் கண்டு எப்பவோ செத்திருக்கலாம். ஆனா இப்பத்தான் இவள் திருட்டைக் கண்டு பிடிச்ச மாதிரி இவளை அடி அடின்னு அடிச்சுட்டுச் சாத்தூர்ப் பாலத்தைப் பார்த்து ஓடியிருக்கான்...''

''இதுவரையிலும் அவன் இவளை எப்படி இவள் போக்கிலே விட்டுக் கிட்டிருந்தான்? இப்ப மட்டும் எதுக்காக அடிச்சான்?''

''அது யாருக்குத் தெரியும்? கடன்காரங்க இவனை நெருக்குனது ஊரெல்லாம் தெரியும். பயலாலே சமாளிக்க முடியல்லே. எப்படி முடியும்? சக்திக்கு மீறி வாங்கிட்டான். அதுக்கும் இவதான் காரணம். கடனை வாங்கி வாங்கி இவளுக்கு நகைன்னும் நட்டுன்னும் சேலைன்னும் ரவுக்கைன்னும் வாங்கிக் குடுத்து அலங்கரிச்சு அழகு பார்த்தான். இவ செகப்புத் தோலைப் பார்த்து மயங்கிக் கெடந்த பயல், இவ நடத்தையைப் பத்திக் கவலைப் படாமல் இருந்தான். கடன்காரங்க நெருக்கினப் பிறகுதான் இவளை அடிக்க அவனுக்குக் கை வந்திருக்கு. என்ன

எழுவோ, முட்டாப் பயல் இவகிட்டே அப்படி உசிர் வச்சிருக்க வேண்டாம்; இவனுக்காக அப்படி உசுரை விட்டிருக்கவும் வேண்டாம். அவனும் போய்ச் சேர்ந்தான். இவ பிழைப்பும் நட்டாத்துக் கோரையாப் போச்சு... கெடந்து சீரழியிரு.''

''பாவம்...!''

''பாவம் என்ன பாவம்! செய்தாருக்குச் செய்த வினை. கடன்காரங்க வந்து வீடு, நிலம், நகை—நட்டு...இப்படி எல்லாத்தியும் ஜப்தி பண்ணிட்டாங்க. இவ இப்போ பிள்ளை குட்டிகளோட ஒரு புண்ணியவான் இரக்கப்பட்டு விட்ட குடிசையிலே ஒண்டிக்கிட்டுக் காலத்தைத் தள்ளிக்கிட்டிருக்கிரு. இவனுடைய சிநேகிதக்காரங்களிலே ரெண்டொருத்தன் பெரிய புள்ளிதான். ஆனல் இப்போ ஒரு பயலும் திரும்பிப் பார்க்கல்லே. தலையைக் கண்டால் துட்டுக் கேட்பாளோன்னு பயந்துக்கிட்டு எவனும் இந்தத் திசையிலேயே திரும்பறது கிடையாது. அது மட்டுமா? இவ நடத்தைக்கு-கட்டின புருஷனுக்குத் துரோகம் பண்ணினதுக்கு — இந்தக் கதிதான் கிடைக்கும்னும் அந்தக் களவாணிப் பயல்களே பேசருங்க...''

''இப்போ சாப்பாட்டுக்கு என்ன பண்ரு?''

''என்ன பண்ணுவா? இந்தக் கட்டுப் பொசுக்கற வெய்யிலிலே கரிசற் காட்டிலே கூலி வேலை செஞ்சு பிழைக்கிரு. அரை வயித்துக் கஞ்சிதான்.... இவ இருந்த சிங்காரமும், பவுசும், மேட்டிமையும், இவ வகை வகையா தினுசு தினுசா ஆக்கிச் சாப்பிட்ட சொகுசுச் சாப்பாடும், ஏன் கேக்கிறீஹ! அதை யெல்லாம் இப்போ நினைச்சுக்கூடப் பார்க்க முடியல்லே. மொதலாளி. அவ பண்ணின பாவத்தை அவ அனுபவிக்கிரு. யார் என்ன பண்றது?''

''இப்படிப் பேசறயே மாடசாமி! இவளைப் பார்த்தா உனக்கு இரக்கமே இல்லையா? உனக்கு ஒரு தங்கச்சி இப்படி இருந்தா, நீ இப்படித்தான் பேசுவியா?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

''மொதலாளி! நான் கூலிக்காரன் தான். இருந்தாலும் சொல்றேன். எனக்கு மானத்தை விட உசுர் பெரிசில்லே. இவ என் தங்கச்சியா யிருந்தா எப்பவோ இவளை ரெண்டு துண்டா வெட்டிப் போட்டுட்டு, தூக்கு மரத்திலே தொங்கி யிருப்பேன். தெரியுமா மொதலாளி?''

''மாடசாமி! நீ அப்படித்தான் செய்திருப்பே. எனக்கும் தெரியும். ஆனு, அப்படிச் செய்யறதுக்குப் பதிலா வேறு விதமா நம்மளாலே நடந்துக்க முடியாதான்னு பார்க்கிறேன்....... போகட்டும்... இந்தப் பேச்சை விடு. இந்தக் கதையைப் பேசப் பேசச் சங்கடமா இருக்கு... வா, போகலாம்'' என்ருன் ரங்கராஜன்.

தெய்விகமான சாந்தி நிலவும் ஒரு கிராமத்தில், தன் தந்தையும் தாயும் புது மணத் தம்பதிகளாக இன்ப வாழ்க்கையைத் தொடங்கிய ஓர் ஊரில் தன்னுடைய தாயாரின் அழகும் குணமும் இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் எத்தனையோ உள்ளங்களில் படிந்திருக்கும் இதே மண்ணில், இது போன்ற ஒரு கதையும் நடந்திருக்கிறது. இப்படி ஒரு விரசமும் ஒரு பாவமும், ஒரு கொடுமையும் நிகழச் சாத்தியப்பட்டிருக்கிறது என்பதை வேதனையோடு நினைத்துக் கொண்டு அவன் நடந்தான். பொழுதும் இருட்டி விட்டது.

(தொடரும்)

---

அட்டைப்பட விளக்கம்

## செல்லற்க!

பசுமையான செடி கொடிகளும், மரங்களும் அடர்ந்து வளர்ந்து சூழ்நிலையைச் சுகமாக்கிக் கொண்டிருக்கிறது. குளிர்ந்த நீர் நிறைந்த பொய்கை அந்தப் பிரதேசத்துக்கு இதம் அளித்துக் கொண்டிருக்கிறது. மாலை வேளை, மனகக்ரு ரம்மியமாயிருக்கிறது. போதையூட்டும் அற்புதமான இந்தப் புறக் காட்சிகளுக்கெல்லாம் எழில் சேர்த்தது போல ஓர் இளைஞனும், பெண்ணும் அமர்ந்திருக்கின்றனர். அவர்களுக்குள் ஏன் இந்த மௌனம்!

ஓ! விஷயம் இதுதான்: வாலிபன் தான் அவசரமாக அவளைப் பிரிந்து வெளியூர் செல்ல வேண்டியிருப்பதன் அவசியத்தை அவளிடம் மிகவும் பக்குவமாகத் தெரிவிக்கிருன். ''கண்ணே, கண் கலங்காதே! ஒரு நொடியில் திரும்பிவிடுவேன்'' என்று வாக்குறுதி தருகிருன்.

காதலிக்கு ஒரே கோபம். ''நீங்கள் திரும்பி வரும்போது உங்களை வரவேற்க யார் உயிருடன் இருக்கிருர்களோ, அவர்களிடம் அந்த விவரங்களைச் சொல்லி மகிழுங்கள்'' என்று கடுமையாகத் தாக்குகிருள்.

**''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க்குரை''**

என்ற வள்ளுவர் வாக்கை ஓவியர் ரங்கநாதன் இவ்விதழ் அட்டைப் படமாகக் காட்டியிருக்கிருர்.




CMCF-3-152- TAM

அன்று ஞாயிற்றுக்கிழமை: நர்ஸ்கள் விடுதியில் ஒரே இரைச்சல். ஏன் இருக்காது? நாற்பது இளம் பெண்கள் குடியிருந்தார்கள் அங்கே. ஓய்வுநாட்களில் ஒருபொழுதாகிலும் அரட்டைக் கச்சேரி நடத்தாவிடில், அவர்கள் உயிர் போய்விடாதா என்ன?

அனைவரும் அம்புஜத்தின் அறையை ஒட்டியிருந்த பொது ஹாலில் கூடியிருந்தார்கள். நாற்காலிகளும், பெஞ்சுகளும் கண்டபடி இழுத்துப் போடப்பட்டிருந்தன. ஒரு நாற்காலியில் சராசரி இரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். சிலர் தலையணையை அணைத்தபடியே சோம்பி அமர்ந்திருந்தனர். (படுக்கையை விட்டு எட்டு மணிக்குப் பின் பலவந்தமாக எழுப்பப்பட்டவர்கள் இவர்கள்) மேஜையின் மீது ஆரோகணித்த சில மாதுகளும் அங்கு காட்சியளித்தனர். தரையிலே நிம்மதியாகக் குந்தியபடி கச்சேரியில் பங்கெடுத்துக் கொள்ள ஆயத்தமானவர்களும் இருந்தனர். எப்பொழுதும் போல் அம்புஜம் பேசத் தொடங்கியவுடன் கச்சேரி சூடு பிடித்தது. ''நேற்று எங்க பிரசவ 'வார்டி'ல் ஒரே வேடிக்கை போ '' என்று அவள் தொடங்கவும், ''ஏன் யாருக்காவது மூன்றும் தடவை மூன்று குழந்தைகள் பிறந்ததோ?'' என்று குறுக்கிட்டாள் லில்லி.

''அதெல்லாம் ரொம்பச் சகஜமாகி விட்டது; எங்களுக்குச் சிரிப்பே வராது! இது வேறு விஷயம்'' என்று கூறி விட்டு வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்கத் தொடங்கினாள்.

''ஓஹோ...அதைச் சொல்கிறாயா?'' என்று கேட்டுவிட்டு விழுந்து விழுந்து சிரித்தாள் ராணி.

''புரிந்தது, புரிந்தது'' என்று கூறிக் கலா, மாலா, லீலா மூவரும் கலகல வென்று நகைத்தார்கள்.

''ஆர்டர் ஆர்டர் '' என்று மேஜையைக் குத்தின எஸ்தர், ''எங்களுக்கெல்லாம் விஷயம் என்னவென்று சொல்லாமல் நீங்கள் பாட்டுக்கு ஈ... ஈ... என்று இளித்தால் என்ன அர்த்தம்?'' என்று கத்தினாள்.

பெர்க்லி-கல்கி இலக்கியப் பரிசுத்திட்டம்



## முதல் பரிசு ஆயிரம் ரூபாய் பெறும் ஹாஸ்யக் கதை



''சீக்கிரம் சொல்லுடி, எனக்கு நாழியாச்சு! எண்ணெய் தேய்த்துக் கொள்ளவேண்டும். செவ்வாய், வெள்ளி எண்ணெய்க் குளி குளித்தாக வேண்டுமென்று நேற்றுக்கூட அம்மாவிடமிருந்து உத்தரவு வந்திருக்கிறது'' என்றாள் துளசி.

''உனக்கு அவசரமானால் நீ போடி குழந்தே! போய்ச் சமர்த்தாய்ப் பருப்புச் சாதம் சாப்பிடு. பிறகு அம்மா மடியிலே 'தாச்சி'க்கோ...''

''ஆமாம், வார்டில் என்ன நடந்தது?'' என்று அவசரப் படுத்தினாள் செங்கமலம்.

''அதுக்குள்ளே இவள் என்னமா பறக்கிறாள்? நாளைக்கு இந்த உண்மை நிகழ்ச்சிக்குக் கண்ணும் காதும் வைத்துக் கதையாக்கிக் காசாக்கலாம் என்று நினைக்கிறாள் போலும்! இப்போது நான் சொல்லப்போகும் சம்பவம் 'காப்பிரைட்!...''

''இதில் வரும் கதாபாத்திரங்கள் நிஜமானவர்கள்; நிகழ்ச்சிகளும் அப்படியே ...என்ன சரிதானே?''

''போதுண்டி பீடிகை; 'போர்' அடிக்கிறது'' என்று சலித்துக் கொண்டாள் எஸ்தர். மற்றவர்கள் எதையோ நினைத்துக் கொண்டு மீண்டும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''சிரிப்பை நிறுத்திவிட்டு விஷயத்தைச் சொல்கிறாயா, இல்லையா?'' என்று அம்புஜத்தைக் கிள்ளினாள் எஸ்தர்.

''இருந்தாலும் அந்த ஆசாமியை நினைத்தால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. அவர் மூஞ்சியும், மூக்குக் கண்ணாடியும் ஒன்பது மாதங்களாகத் தூங்கவே யில்லையாம்''

''ஏன் அப்படி?''

''பாவம்! எவ்வளவு வேதனை அனுபவிச்சாரோ! அவர் மனைவிக்கு 'உண்டான'திலிருந்து, அவள் அவஸ்தைப்படும் போதெல்லாம் கூடவே அவரும் அதே அளவுக்கு அவஸ்தைப் பட்டு வருகிறாராம். நேற்று அவர் மனைவிக்கு வலி கண்டு துடித்துக் கொண்டிருந்தாள். இவருக்கும் தாங்க முடியாத வலி. பாவம்!







# என் அருமை 'நைட்டிங்கேல்'

விஜயா பாலகிருஷ்ணன்

அடித்துப் போய்விட்டார்: டாக்டர் ஜெனி யிடம் என்ன செய்வது என்று வினவி னார். அவள் மனத் தத்துவப் புத்தகங்களை யும், அந்த நாளில் வகுப்பில் எழுதிக் கொண்ட 'நோட்ஸ்'களையும் புரட்டிப் பார்த்தாள். பட்டினத்தில் இருக்கும் சகோதர டாக்டர்களுக்கு 'போன்' செய்து கேட்டாள். ஒன்றும் பிரயோசனப்படவில்லை. கடைசியில் ஆசாமியிடம் ஒரு டம்ளர் 'ஐஸ் வாட்டர்' குடித்துவிட்டு அமைதியாக உட்கார்ந்திருக் கும்படி கேட்டுக் கொண்டாள். ஆனால் அவர் சம்மதிக்கவில்லை. தம்மையும் பிரசவ வார் டில் அனுமதிக்க வேண்டும் என்று இடுப்பைப் பிடித்துக் கொண்டு கத்தினார். முதலில் 'கல்தா' கொடுக்க நினைத்த டாக்டர், ஏனோ அந்த அப்பாவியிடம் அனுதாபம் காட்டி அவரை ஒரு தனி அறையில் படுக்க வைத் தார்; என்னைக் காவலும் போட்டார். அவர் மனைவிக்குக் காலையில் பிரசவமானபின்தான் அவர் வயிற்று வலி நின்றது...'' என்று கூறிச் சிரிக்கத் தொடங்கினாள்.

''செங்கமலம்! இதை வைத்துக் கொண்டு நீ கதை எழுத முடியாது. ஏற்கனவே யாரா வது இதை ஆங்கிலத்தில் எழுதியிருப் பார்கள்...'' என்றாள் ராஜம்.

''நான் எது சொன்னாலும் அது ஏதோ புத்தகத்திலிருந்து எடுத்தது என்று சாதித்து விடுவாள் ராஜம். அவள் வாழ்க்கையில் சுவையாக எதுவும் நடப்பதில்லை போலிருக் கிறது....'' என்று சலித்துக் கொண்டாள் அம்புஜம்.

''உன்னைப் போல் வாரா வாரம் எதுவும் நடப்பதில்லை. ஆனால் ஒரே ஒரு தடவை...''

''ஏன் 'தொடரும்' போட்டு விட்டாய்? 'சஸ்பென்ஸா?' எனக்கு ஒரு 'சஸ்பென்ஸு'ம் கிடையாது. நீ அந்தக் கதையை என்னிடம் ஆயிரத்து மூந்நூற்று இருபத்து நாலு தரம் சொல்லியிருக்கிறாய்'' என்றாள் கலா.

''எங்களுக்குச் சொல்லவில்லையே? கமான் டெல் அஸ்... டோண்ட் கீப் மை...'' என்று அவளைக் கட்டிக் கொண்டாள் 'டூட்டி' முடிந்து அங்கு வந்த விமலா.

''அது ஒன்றும் சுவையான நிகழ்ச்சி யில்லை யடி.''

''பின் நீ ஏன் அதை ஆயிரத்து மூந் நூற்று இருபத்து நாலு தரம் சொல்லி யிருக்கிறாய்?''

''சீக்கிரம் சொல்லி அழு... நாங்களும் சிரித்துத் தொலைக்கிறோம்.''

''அவள் சொல்லா விட்டால் நீ சொல்லு'' என்று கலாவைத் தூண்டி விட்டார்கள் தோழிகள்.

''சொல்லலாமாடி?''

''ஏது சம்மதம் கேட்கிறாய்? காதல் விஷ யமோ? யாராவது 'பேஷண்ட்' இவளைக் காதலித்து விட்டானா? நிறைய சினிமா பார்த்திருப்பான்...''

''சீ! சீ! அதெல்லாம் இல்லையடி!''

''என்ன இல்லையடி, காதலேதான்!''

''சீக்கிரம் சொல்லுடி. எனக்குக் காதல் கதைகள் மீது ஒரே காதல். அதுவும் உண் மைக் காதல் என்றால் கேட்கணுமா?''

''ஒருவேளை சப்பென்றிருந்தாலும் இருக் கும்.''

''முதல் சந்திப்பு எங்கே ஏற்பட்டது? சிரிப் பாய்ச் சிரிக்கும் கடற்கரையிலா, ரயிலடி யிலா? கண்டதும் காதலா, காணாமலே காதலா ? தெய்விகக் காதலா? எது? எது?''

''ராஜம் கோபித்துக் கொள்ள மாட்டாள் என்றால் சொல்லுகிறேன்.''

''நான் ஏன் கோபித்துக் கொள்கிறேன்? ஆனால் நிஜத்தைத் தவிர வேறு எதுவும் சொல்லக் கூடாது.''

''அது என் விருப்பம். கதையைக் கூட் டவோ, மாற்றவோ, திருத்தவோ கதை சொல்லிக்கு உரிமையுண்டு...'' என்று கூறி விட்டுச் சூடான காப்பியை ஒரு வாய் குடித் தாள் கலா. பிறகு கதைவிடத் தொடங் கினாள்....

ஃ ஃ ஃ

**ப**ட்சி ஜாலங்கள் பாட்டிசைக்கும் அதி காலை வேளையிலே, வெள்ளை வெளேர் என்ற உடையில், அன்றலர்ந்த மஞ்சள் ரோஜாவின் புதுமையுடன், ஆஸ்பத்திரியை நோக்கி மிடுக்கு நடை போடும் நர்ஸ் ராஜத்தின் சௌந்தரியத்தைப் பருகிப் பரவச ஏப்ப மிடாதவர் யார்? ரசனையற்ற தொண்டு கிழங்கள் கூட, ஒரு கணம் நின்று கவனித்துப் பிறகுதான் நடை பயிலும். ('நில், கவனி, நட' என்ற அடைமொழி தோன்ற ராஜம் காரணமில்லைதான்!) எத்தனையோ கறுப்புக் கண்ணாடிகளும், பீட்டில் கிராப்புகளும், குறுகிய 'பாண்டு', குறுந்தாடி போன்ற அலங் காரங்களுடன் ஊரைப் பவனி வரும் 'ரோமி யோ'க்களும் அவளிடம் பேச முயன்று தோற்றிருக்கிறார்கள். அவளுக்குப் புது வருஷ வாழ்த்துக்களும், பொங்கல் வாழ்த் துக்களும் தபாலில் அனுப்பித் தங்கள் ஜன்மம் சாபல்யமடைந்து விட்டதாக எண்ணின வர்கள் எத்தனையோ பேர். தனக்குப் பயங் கரமான வியாதி ஏதும் வராதா, தாம் அவள் பணியாற்றும் 'வார்டி'ல் அனுமதிக்கப்பட மாட்டோமா, காதல் கிறுதல் பிறக்காவிட் டாலும் அவளைப் பார்த்துக் கொண்டே உயிரை விட மாட்டோமா என்று எண்ணிச் செத்தவர்கள் எத்தனையோ பேர். காற்றிலே படபடக்கும் அவள் வெண்ணிற ஆடையின் ஓரம் தன் உடலைத் தொட்டுக் கடைத் தேற் றாதா என்று கலங்கினவர்கள் சிலர். சினிமா விலே அவளைப் புதுமுகமாக அறிமுகப்படுத்த முயன்று, தோல்வியுற்று, மணம் செய்து கொள்ள முன்வந்து மறுக்கப்பட்டு, மன முடைந்து, தாடி வளர்த்துக் கொண்ட சினிமா டைரக்டரைப் பற்றி என்ன சொல்ல ?....

('கதை ! கதை ! வர்ணனை எல்லாம் வேண்டாம்! தடதட வென்று சொல்லிக் கொண்டு போக வும்' என்ற கூச்சல்.)

தபால்காரன் தடதட வென்று கதவைத் தட்டினான். அவன் ராஜத்தினிடம் ஒரு கடி தத்தைத் தந்தான். அன்று வரையில் அம்மா விடமிருந்து கடிதம் வரும், 'அமெரிக்கன் ரிப்போர்ட்டர்' வரும், அல்லது கஷ்டப் பட்டு வரைந்த கவிதை திரும்பி வரும். அதுதான் ராஜத்தின் அநுபவம் ! உள்ளத் திலே உத்வேகத்துடன் ஒரு புயலை எழுப்பக் கூடிய காதல் கடிதம் வந்ததில்லைதான் !




# சிறந்த குடும்பக்கலையின் தொடக்கம் ப்ரெஸ்டீஜ்

**Prestige**

**முற்றிலும் அபாயமற்றது:** அதிகபட்ச பாதுகாப்பு சாதனங்கள் உள்ளன.

**தாராளமான இடவசதி:** உங்கள் பாத்திரங்களுக்கே, ஸ்டீம்-இட்டிற்கே.

**சர்வீஸ்:** இந்தியா முழுவதும், விற்பனைக்குப்பின் சர்வீஸ்.

**எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றதொரு சரியான சைஸ் இருக்கிறது.**

நேரத்தை - மிச்சப்படுத்துகிறது

எரிபொருளை - மிச்சப்படுத்துகிறது




**இலவசம்:** உங்கள் வசதிக்கென, அதிகப்படி ப்ளக் ஒன்றும், பின்டிப் ஒன்றும், சமையற்குறிப்பு புத்தகம் ஒன்றும் இந்த அட்டைப் பெட்டிக்குள் [illegible]

தயாரிப்பாளர்கள்:
டி.டி.கே. (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-35.

# லிப்டன் 'ரூபி டஸ்ட் டீ'

**இன்பம் தந்திடும் இனியதொரு பானம்!
சுவை செறிந்தது! மணம் மிகுந்தது!
போட்டகணமே கிட்டிடும் தேநீர்!**

சிறந்த தேயிலையைப் பருகி ரசிப்பவர் புகழ்வது "லிப்டன்ஸ் ரூபி டஸ்ட் டீ"யையே!

ஒவ்வொரு ரூபி டஸ்ட் தேயிலைப் பாக்கெட்டும் தருவது அதிகக் கோப்பைத் தேநீர்!

செறிந்த மணம்! கெட்டியான பானம்! நேர்த்தியான சுவை!

பருகுவதிலோர் இன்பம்! விலையிலோ சிக்கனம்!




**லிப்டன் என்றாலே
நல்ல டீ**




LRDC-1 TAM

'வயலெட்' மசியில் எழுதப்பட்ட கடிதத்தின் சாராம்சம் வருமாறு. நான்காம் வகுப்பில் படிக்கும் போது அவர் பிளாரன்ஸ் நைட்டிங்கேலின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்க நேர்ந்ததாம்! அன்றே முடிவு கட்டி விட்டாராம், ஒரு நர்ஸைத்தான் மணந்து கொள்வதென்று! நேற்றுவரையில் சல்லடை போட்டுச் சலித்ததில் மனத்துக்குப் பிடித்த நர்ஸ் அகப்படவில்லையாம்! ராஜத்தைக் கண்ட உடனேயே, அவள்தான் நைட்டிங்கேலின் மறு பிறவி என்று தீர்மானித்தாராம். காதல் கைகூடிக் கல்யாணமானால் அவளை நைட்டிங்கேல் என்றுதான் அழைப்பாராம்!

**('நைட்டிங்கேலா? ராஜம் குளியலறையில் பாடுவதை அவர் எங்கே கேட்டிருக்கப் போகிறார்?')**

ராஜம் அவரைப் 'பௌர்ணமா' ஹோட்டலில் சந்திக்க வேண்டுமாம்; இல்லாவிட்டால் அவர் உள்ளம் உடைந்து விடுமாம்! அடையாளம் கண்டு கொள்வதற்காக – ஏதோ ஒரு கதையில் யாரோ ஒரு கதாபாத்திரம் செய்வது போல் – அவர் தம் சட்டைப் பொத்தானில் ஒரு மலரைச் செருகியிருப்பாராம். 'வயலெட்' வர்ணத்தை விரும்பும் அவர் வாடாமல்லியைத் தேர்ந்தெடுத்ததில் வியப்பில்லை.... மற்றவை நேரில்....

இந்தக் கடிதத்தைப் படித்த பேதைப் பெண் என்ன செய்தாள்? அவள் இதயம் ஒரு விநாடிக்கு எத்தனை தடவை 'பக்பக்' என்று அடித்துக் கொண்டது? அவள் இரத்த ஓட்டம் எந்த அளவுக்கு அதிகரித்தது? ஆஸ்பத்திரியில் அத்தனை அளக்கும் கருவிகள் இருந்தும் ஏனோ அவள் அவற்றையெல்லாம் அளந்தாளில்லை.... நேர்மாறாக உயிர்த் தோழி கலாவைத் தேடிச் சென்றாள்.

கலாவும் அவளும் 'சயாமீஸ் இரட்டையர்கள்' போல. எப்பொழுதும் சேர்ந்தே எங்கும் செல்வார்கள். இவளுக்கு மிளகாய்ப் பொடி நெடி ஏறினால் அவள் தும்மித் தவிப்பாள். அவளை யாராவது கிச்சுக் கிச்சு மூட்டினால் இவளுக்குச் சிரித்துப் புரை ஏறும். அவள் வெல்லச் சீடையைக் கடித்தால் இவளுக்குப் பல் வலிக்கும். இவள் விழுங்கும் ஐஸ்கிரீம் அவளுக்கு இனிக்கும்.

கடிதத்தைப் படித்துப் பார்த்த கலா யாரோ 'காலிப் பயல் எழுதினது' என்று முதலில் குறிப்பிட்டாள். மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு அதை மீண்டும் படித்தவள் 'எவனோ அப்பாவியின் பிதற்றல்' என்றாள். பூதக் கண்ணாடியை வைத்துக்கொண்டு ஆராய்ந்தபின், 'இது யாரோ தமாஷுக்காக எழுதினது' என்றாள். கண்ணாடி எதுவுமே இல்லாமல் மீண்டும் படித்துப் பார்த்தவள், 'ஆசாமி ரொம்ப நல்லவராக இருக்க வேண்டும்; பிளாரன்ஸ் நைட்டிங்கேலின் வாழ்க்கை அவரை இவ்வளவு தூரம் வசப்படுத்தியிருக்கிறதே' என்றாள். எதற்கும் ஹோட்டலுக்குச் சென்று ஆசாமியைத் தூரத்திலிருந்து பார்த்து விட்டு வருவது என்று தீர்மானித்தார்கள். நர்ஸ் உடையில் போகாமல், வேறு ஆடை அணிந்து கொண்டு, கூலிங் கிளாஸை மாட்டிக் கொண்டால் அடையாளம் தெரியாதல்லவா? கொண்டை திணிசைக்கூட வேண்டுமானால் மாற்றி விடலாம். தோழிகள் தங்கள் மூளைக்குத் தாங்களே 'சபாஷ்' போட்டுக் கொண்டார்கள்!




''திறப்பு விழா பண்ணின உனக்கு வெள்ளிக் கத்திரிக்கோல் பரிசாகக் கொடுத்திருக்கிறாங்களே! அப்புறம் என்ன?''

''கத்திரிக்கோல் இருக்கட்டும்; வெட்டின ரிப்பன் ரொம்ப அழகா இருக்கு! அதையும்தான் கேட்டுப் பாருங்களேன்!''

காதலில் முட்டுக்கட்டைகள் ஏற்படுவது, கதைகளில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும் உண்டு போலும்! அன்று பார்த்து, 'பௌர்ணமா' ஹோட்டல் சிப்பந்திகள் ஏன் வேலைநிறுத்தம் செய்ய வேண்டும்? யாரோ ஒரு சாப்பாட்டு ராமர் சாம்பாரைக் குறை கூறினதற்காக அவர்கள் 'ஸ்டிரைக்' செய்திருந்தார்கள். 'சாம்பார் வாழ்க! சாப்பாட்டு ராமர்கள் ஒழிக!' என்ற தோரணையில் ஏதோ கோஷமிட்டுக் கொண்டிருந்தார்கள். அடுப்பில் ஈர விறகைப் போட்டு, யாரும் ஹோட்டலுக்குள் நுழையாதபடி 'கண்ணீர்ப் புகை' வேறு பிரயோகம் செய்து கொண்டிருந்தார்கள். சாத்துவிகப் போராட்டத்தில் நம்பிக்கையில்லாத ஒரு சிலர் லட்டுக்களை விட்டெறிந்து கொண்டிருந்தார்கள். சாப்பாட்டு ராமர்களில் ஒரு சிலரது 'டெரிலின்' சட்டைகள் பாழான தாகக் கேள்வி.

ராஜமும் கலாவும் வாடா மல்லி மலர் எங்கேயாவது தென்படுகிறதா என்று தேடினார்கள். பறக்கும் தட்டுகளும், போண்டாக்களும்தான் அவர்கள் திருஷ்டியில் விழுந்தன. ஒரே ஒரு இட்டிலித் துண்டு கலாவின் கன்னத்தைத் தாக்கியது. அவள் மூர்ச்சையானாள். அதைக் கண்ட ராஜமும் மூர்ச்சையானாள்!

**('போதும், மட்டமான ஹாஸ்யம்! சீக்கிரம் அடுத்த கட்டத்துக்குத் தாவவும்.')**

பிறகு சில நாட்கள் வரையில் எதுவுமே நிகழவில்லை. ராஜமும், கலாவும் அந்தக் கடி

தத்தை வைத்துக் கொண்டு என்னென்னமோ அனுமானித்தார்கள். ஓரொரு சமயம் அந்தக் கடிதம் யாரோ விஷமி வேடிக்கைக்காக எழுதினதோ என்றுகூடச் சந்தேகித்தார்கள். (அது ஏப்ரல் மாதம் முதல் தேதியல்லவா வந்தது ?) நாளடைவில் அவர்கள் அந்தக் கடிதத்தையும், வாடாமல்லி மலரையும், ஹோட்டல் 'பௌர்ணிமா'வையும் கொஞ்சம் கொஞ்சமாக மறக்கத் தொடங்கினார்கள். அப்பொழுதுதான் அந்தப் பொல்லாத தபால்காரர் மீண்டும் கதவைத் தட்டினார் !

கவர் மீதிருந்த வயலெட் மசியே சொல்லிற்று அது அவரிடமிருந்து வந்ததுதானென்று! இந்தத் தடவை துணிச்சலுடன் 'என் அருமை 'நைட்டிங்கேல்'' என்றே கடிதத்தைத் தொடங்கியிருந்தார். அன்று ஹோட்டல் 'ஸ்டிரைக்' காரணமாகச் சந்திக்க முடியாமல்போனதற்காக வருத்தம் தெரிவித்திருந்தார். போண்டா, இட்லி பறந்த வேகத்தில் அவருக்கு இலேசாக அடிபட்டதாம். கூட இருந்து கவனிக்க ஒரு நர்ஸ் இல்லையே என்று வருந்தினாராம். இந்தத் தடவை இன்னொரு ஹோட்டலில் இத்தனை மணிக்குச் சந்திப்போம் என்று எழுதியிருந்தார். அந்த ஹோட்டலில் வேலை நிறுத்தம் எதுவும் சமீபத்தில் நடக்கப் போவதில்லை என்றும் குறிப்பிட்டிருந்தார்.

ராஜத்துக்கும் கலாவுக்கும் இப்பொழுது துணிவு வந்து விட்டது. மாறுவேஷத்தில் சென்று ஆசாமி யார் என்று பார்த்து வரத் தீர்மானித்தார்கள். கம்மீஸ், பைஜாமா, கூலிங் கிளாஸ் அணிந்து சென்றால் யாரால் தான் எளிதில் அடையாளம் கண்டுகொள்ள முடியும் ? தமிழில் பேசாமல், இந்தியில் ஏதாவது முணுமுணுத்தால் எங்கேயோ முசபர் நகரிலிருந்து வந்த மங்கைகள் என்று யாரும் எண்ணிவிட மாட்டார்களா என்ன? ராஜம் கம்மீஸ் தைப்பதற்காகத் தையற் கடைக்குச் சென்றாள்; அவளுடைய உயிர்த் தோழி இந்தி பாலபோதினி வாங்க வேறு திசையில் விரைந்தாள்.

அந்த நாளும் வந்தது ! தோழிகள் வடநாட்டு உடை அணிந்து கொண்டார்கள். 'உனக்கு ரொம்பப் பொருந்துகிறது !' என்று இருவரும் ஏககாலத்தில் கூச்சலிட்டார்கள். பிறகு நாக்கைக் கடித்துக்கொண்டு, 'பஹுத் அச்சா' என்று திருத்தினார்கள். அவர்கள் இப்படிக் குஷியாகக் கிளம்பிக் கொண்டிருக்கும் வேளையில்தானா ஆஸ்பத்திரி 'டீன்' அங்கு வர வேண்டும்?

''ராஜம்! உன்னைத் தேடிக் கொண்டுதான் வந்தேன். உன் உதவி எனக்குத் தேவை. ஸ்பெஷல் வார்டில் 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்ட அறையில் என் நண்பர் ச ர போ ஜி அனுமதிக்கப்பட்டிருக்கிறார். அவரை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு. பிளாரன்ஸ் நைட்டிங்கேல் பிச்சை வாங்க வேண்டும்'' என்று சொன்னவர், ''போ.... உடனே போ....'' என்று அவசரப்படுத்தினார். நல்ல வேளை ! வடநாட்டு உடையைப் பற்றி அவர் மசட்டுப் பிசட்டென்று எதுவும் கேட்கவில்லை.

'சரபோஜி நாசமாய்ப் போக!' என்று தூற்றிக் கொண்டே வார்டுக்குள் நுழைந்தாள் ராஜம். அங்கு தொண்டு கிழவர் ஒருவர் ஆப்பிள் விழுங்கிக் கொண்டிருந்தார். ஒரு கட்டுப் பழைய புத்தகங்கள் அவர் பக்கத்தில் கன்னாபின்னாவென்று சிதறிக் கிடந்தன. அடிக்கொரு தரம் ஒரு துண்டுக் காகிதத்தில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். தனக்குக் காதல் கடிதம் எழுதினவனைப் பார்க்க முடியாமல் இப்படிக் 'கரடி வேலை' செய்த சரபோஜியை மனத்துக்குள் திட்டித் தீர்த்தாள் ராஜம்.

இந்தக் கிழவருக்கு உடம்புக்கு என்ன? நிச்சயம் வயிற்று வலி இல்லை! இப்படி ஆப்பிளையும், ரொட்டியையும், பாலையும் உள்ளே தள்ள டாக்டர்கள் அனுமதிக்க மாட்டார்கள். ஜுரம், கிரம் எதுவுமில்லை. ஆபரேஷனுக்கோ, 'ஆப்ஸர்வேஷனு'க்கோ வந்தவர் போலும் தோன்றவில்லை. அடிக்கடி அந்தப் பழைய புத்தகங்களைப் புரட்டி ஏதோ எழுதுவதைப் பார்த்தாள்.:.

அவருக்கு மூளைக் கோளாறும் இல்லை என்பது ராஜத்துக்கு விரைவிலேயே தெரிந்து விட்டது! அவளிடம் சரளமாக உரையாடினார் அவர்.

''ராஜம் !''

''ஏன், ஸார் ?''

''இதோ பார்... என்னை 'ஸார்' 'கீர்' என்று அழைக்காதே ! நான் பள்ளிக்கூட வாத்தியாரில்லை.''

ராஜம் மௌனம் சாதித்தாள்.

''என்ன யோசனை பண்ணறே? 'பாய் பிரண்ட்' எப்படி சிகரெட்டை அனுபவித்துக் கொண்டிருப்பானென்று ?''

''எனக்குச் சிகரெட் குடிப்பவர்களையே பிடிக்காது ஸார்.... ''

''ஸார் போட மட்டும் பிடிக்குமாக்கும்.''

''போங்க, ஸார் !''

''சிகரெட் பிடிக்காது. வேறு என்ன பிடிக்கும்? சீடையா ?''

''சீடை. நான் பிரமாதமாகச் செய்வேன்.''

''எனக்குப் பல்லில்லை என்று தைரியமாகச் சொல்கிறாயாக்கும்.''

''பொருவிளங்காய், முறுக்குகூடச் செய்யத் தெரியும்.... இன்னும் சொல்லப் போனால் பாட்டிப் பலகாரங்கள் அத்தனையும் நான் தயாரிப்பேன்.''

''அதாவது, என்னால் கடிக்க முடியாததெல்லாம்.''

''உங்களுக்குத்தான் உடம்பு சரியில்லையே! இதை யெல்லாம் பற்றி ஏன் கனவு காண்கிறீர்கள் ?''

''கனவு காணக்கூடச் சம்மதம் வேணுமா ? நீ எத்தனை பகற் கனவு காண்கிறாய்? மீசையுடன் கூடின ஒரு ஸ்கூட்டர் வாலிபன்....''

''சீ ! ச்சீ ! எனக்கு மீசைக்காரர்களைக் கண்டாலே ஒரே வெறுப்பு. சிகரெட், மீசை இரண்டும் எனக்கு எரிச்சல் ஏற்படுத்தும்....''

''பின் என்னதான் பிடிக்கும் ?''

''கோலம் போடுவது ! நான் ஒரு பாட்டியம்மாளிடம் தினம் ஒரு மணி நேரம் பாடம் கேட்டு வருகிறேன்'' என்று ராஜம் கூறவே,

# நீங்கள்

# புத்திசாலியான முற்போக்குள்ள தாயாரா, அல்லது, பழமையைப் பின்பற்றும் தாயாரா?

# கீழ்க்கண்டதைப் படித்துத் தீர்மானியுங்கள்:

உங்கள் அன்புக் குழந்தைக்கு தாய்ப்பால் அல்லது பால் உணவுகள் தருவதை படிப்படியாக நிறுத்தி, திட உணவு அளிக்க வேண்டியது மிகவும் முக்கியம் என்பதை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள்.



சரி,
இவ் விஷயத்தில் நீங்கள்
என்ன செய்யப் போகிறீர்கள்?

குழந்தைக்கு வீட்டில் சமைத்த தானிய உணவைத் தரப்போகிறீர்களா? ஆனால் அதைத் தயாரிக்க அதிக நேரமாகிறது. அநேகமாக அதைக் குழந்தைகள் விரும்பி உண்ணுவதில்லை; மேலும், அதில் போதிய அளவு போஷாக்குச் சத்தும் இருப்பதில்லை.

இல்லை, குழந்தைக்கு
பாரெக்ஸ் புகட்டப் போகிறீர்களா?



(இது குழந்தைகளுக்கு வழக்கமாக வழங்கப்படும் முதல் திட உணவு) அப்படியென்றால், நீங்கள் புத்தி சாலியான தாயார்தான்!

பாரெக்ஸ் குழந்தைகளுக்கு முழுப்போஷாக்கும் அளிக்கிறது; இது எளிதில் ஜீரணமாகும். சுகாதார ரீதியில் உருவாக்கப்படும் பாரெக்ஸ், தயாரிப்பதற்கு சௌகரியமானது; சுலபமானது பாரெக்ஸுடன், தேவைக்குத் தக்கபடி பாலும், சர்க்கரையும் சேர்க்க வேண்டியது தான். குழந்தையின் உணவு தயார்! முதலில் குழந்தைக்கு சிறு சிறு அளவில் பாரெக்ஸ் ஊட்டத் தொடங்குங்கள்.

பின்னர், அளவை அதிகரிக்கவும். தானியங்கள், விடமின்கள் கனிஜ சத்துக்கள், இரும்புச்சத்து மற்றும் சரியான அளவு புரத சத்துக்கள் கலந்து உருவாக்கப்படும் பாரெக்ஸ் பச்சிளம் குழந்தைகளுக்கு முழுப் போஷாக்கும் அளிக்கிறது.



ஆரோக்கியமுள்ள திடமான வளர்ச்சிக்குத் தேவைப்படும் எல்லா சிறந்த அம்சங்களும் இதில் அடங்கியுள்ளன. அதனால்தான், உலகெங்கிலும் தாய்மார்கள் பாரெக்ஸை நம்புகிறார்கள்.

இலவசமாக பாரெக்ஸ் புத்தகம் பெற, இந்தக் கூப்பனை அனுப்புங்கள்.

என் குழந்தைக்கான மிகச் சிறந்த உணவைப்பற்றி நான் அறிய விரும்புகிறேன் தயவுசெய்துபாரெக்ஸ் புத்தகத்தின் பிரதி ஒன்றை அனுப்பவும். தபால் செலவுக்காக 20 பைசா தபால்தலை அனுப்பியிருக்கிறேன் என் முகவரி.

பெயர் ..............................................

விலாசம் ..............................................

..............................................

..............................................

பாரெக்ஸ் தபால் பெட்டி நம்பர் 202, பம்பாய்-1.




பாரெக்ஸ் குழந்தைகளின் முதல் திட உணவு

**Glaxo**

க்ளாக்ஸோ லெபரெட்டரீஸ் (இந்தியா) லி.

கிழவர் மௌனமானார்: தம் பக்கத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களைப் புரட்டத் தொடங்கினார்: துண்டுக் காகிதத்தில் ஏதோ கிறுக்கினார்.

வேறு ஒரு நர்ஸ் இடமென்று ராஜாவில் போகவும், ஆபரேஷன் தியேட்டரில் அவசர வேலை இருந்தது ராஜத்துக்கு. மிக அவசரமாக ஏதோ மருந்துடன் ஓடிக் கொண்டிருந்தவள், ஓர் இளைஞன் மீது முட்டிக் கொண்டாள். ஏதோ சொல்ல வாயெடுத்த வாலிபனை முறைத்துப் பார்த்தாள். அடுத்த நிமிஷம் அவள் உடம்பு வியர்த்துக் கொட்டியது. அந்த அழகான இளைஞனின் சட்டைப் பொத்தானில் ஒரு வாடாமல்லி மலர் சிரித்தது! அவளிடம் எதுவும் பேசாமல் மேலே நடந்து சென்றான் அவன். சரபோஜியின் வார்டுக்குள் அவன் நுழைவதைக் கண்டதும் அவள் சப்த நாடியும் ஒடுங்கிற்று.

அந்த வாலிபனை இதற்குமுன் எங்கேயோ பார்த்திருப்பதுபோல் பட்டது அவளுக்கு. ஆனால் யாரென்று நினைவு வரவில்லை..... அவனது அழகிய முகம் அடிக்கடி அவள் மனக் கண் முன்னால் தோன்றி மறைந்தது!

அன்று இரவு சரபோஜியிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து அவன் யார் என்று அறிய முயன்றாள் ராஜம்.

''இன்று நான் ஆபரேஷன் தியேட்டருக்குப் போனபின் யாராவது என்னைத் தேடி வந்தார்களா ?''

''நர்ஸ் எஸ்தர் உன்னை விசாரித்தாள்.''

''வேறு யாரும் வரவில்லையா ?''

''இல்லை.... உம்.... வந்தான்.''

''யார் ? யார் வந்தார்கள் ?''

''பழம், பால் சப்ளை செய்பவன்... யாரோ டாக்டரைத் தேடி வந்தான்.''

''வேறு யாரும் வரவில்லையே ?''

'' ஏன் இந்தப் படபடப்பு ? உன் வயசில் நான் எவ்வளவு அமைதியாக இருப்பேன், தெரியுமா ?''

''எனக்கு இப்பொழுது என்ன வயதிருக்கும் என்று நினைக்கிறீர்கள் ?''

'' நாற்பதுக்குக் குறையாது.''

''நீங்க ஒரு பக்கம் ! எனக்கு இன்னும் இருபத்து இரண்டு முடியவில்லை.''

''நான் எப்படி நம்புவது ? உன் பிறந்த தேதி என்ன ?''

'' ஓ ! அதுவா ?'' என்று கேட்டு ஏதோ ஒரு தேதியைக் குறிப்பிட்டாள் ராஜம். அதைக் கவனியாமல் தம் பழைய புத்தகங்களைப் புரட்டத் தொடங்கினார் கிழவர்.

(கதை நீண்டுகொண்டே போகிறது. சீக்கிரம் முடிக்கவும். அநாவசியமான சம்பவங்களை வெட்டி விரைவில் மங்களம் பாடவும்.)

அந்த வாலிபர் யார் என்று விரைவில் கண்டுபிடித்தாள் ராஜம்.. டாக்டர் கிருஷ்ணனை எப்படி அவ்வளவு சீக்கிரம் மறந்தோம் என்று அவளுக்கே விளங்கவில்லை. நர்ஸ் வேலைக்குப் பயிற்சி பெறுகையில் ஒரே ஒரு நாள் அவனுடன் பணியாற்ற நேர்ந்தது... பிளாரன்ஸ் நைட்டிங்கேலின் வாழ்க்கை வரலாறு சிறு வயதில் கிருஷ்ணனின் மனத்தைக் கவர்ந்ததோ இல்லையோ, ராஜத்தின் வாளிப்பான உடற்கட்டும், வசீகரமான புன்னகையும் அவனை மயக்கத்தான் செய்தன.



'' ஒவ்வொரு காலேஜ் பாடப் புத்தகத்துக்கும் நடுநடுவே ரெண்டு சினிமா பாட்டுப் புத்தகங்களை வைத்துத் தைத்து பைண்டு செய்யச் சொன்னார் எங்க அண்ணா !''

பின்னொரு நாள் ராஜத்துக்கும் கிருஷ்ணனுக்குமிடையே நடந்த சம்பாஷணை, 'சென்ஸார்' செய்யாமல் கீழே தரப்பட்டுள்ளது.

''என் அப்பாவை நீ கவனித்துக் கொண்ட முறையை அவர் என்னமாய்ப் புகழுகிறார் தெரியுமா ? வாய்க்கு வாய் வாயாடி என்று சொல்லாமல் 'நல்ல பெண்' என்கிறார்.''

''என்னது? . சரபோஜி உங்கள் தகப்பனாரா? அவருக்கு என்ன வியாதி ?''

''நாட்டுப்பெண் வராத வியாதிதான் ! நான் உன்னிடம் எனக்கு ஏற்பட்டிருக்கும் 'கா'வைத் தெரிவித்தவுடன், கதைகளில் வரும் அப்பாக்கள் போல் 'கூடாது' என்று அவர் கத்தவில்லை. நேர்மாறாக உன்னை அறிமுகம் செய்து கொண்டு, உன் கல்யாண குணங்களை ஆராய விரும்பினார். தம்முடைய நெருங்கிய நண்பரான ஆஸ்பத்திரி 'டீனின்' உதவியுடன் 'வார்டில்' வந்து படுத்துக் கொண்டார். நீ எல்லாரிடமும் நடந்து கொள்ளும் முறையைக் கவனித்தார். உன் வாய் அரட்டையை அவர் எப்படித்தான் பொறுத்துக் கொண்டாரோ? நீ குறிப்பிட்ட இரண்டு விஷயங்கள் அவருக்கு மிகவும் பிடிக்கப் போய், அவர் உனக்குக் கவி பாடத் தொடங்கி விட்டார்! சிகரெட் பிடிக்கும் இளைஞர்களையும், மீசை வைத்துக் கொண்டிருக்கும் இளைஞர்களையும் வெறுப்பதாக நீ சொன்னது அவரை வெகுவாகக் கவர்ந்து விட்டது'' என்று கூறி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தவன், ''நீ சிடை செய்வதில் கெட்டிக்காரியாமே !... என்ன புளுகு! என்ன புளுகு! ஆளைப் பார்த்தால் தெரியவில்லையா, ஒழுங்காகச் சாதம் கூட வடிக்கத் தெரியாதென்று ! பாட்டிப் பலகாரங்கள் எல்லாம் செய்யத் தெரியும் என்று எப்படித்தான் கதை விட்டாயோ ! கோலம் வேறு கற்றுக் கொண்டு வருகிறாய் இல்லையா ?'' என்றான் சிரித்தபடி.

''உங்கள் தகப்பனார் வேறு யாரிடமோ தம் விருப்பு வெறுப்புக்களைக் கொட்டிக் கொண்டிருந்தது ஒரு நாள் என் காதில் விழுந்தது. டீனுக்கு வேண்டியவராயிற்றே, அவரைக் கொஞ்சம் காக்காய் பிடித்து வைப்போம் என்று எண்ணித்தான் அவருக்குப் பிடித்த முறையில் ஏதேதோ சொன்னேன். ஆமாம், அவர் ஒரு கட்டுப் பழைய புத்தகங்களைப் பார்ப்பதும், ஏதோ எழுதுவதுமாகப்

# நெஸ்காஃபே

# சுவையே சொல்லும்:

1 அது உயர்ந்த தென்னிந்திய காபிக் கொட்டையினுல் தயாரிக்கப்படும் 100% தூய காபி

2 அது இன்ஸ்டன்ட் காபி தயாரிப்பதில் உலகிலேயே அதிக அனுபவம் உடையவர்களால் தயாரிக்கப்படுகிறது.

3 அது நீங்கள் விரும்புமளவுக்கு ஸ்டிராங்காக இருக்கிறது.

சிறிதளவு சம அளவு குவியலாக

**அது சிக்கனமானதும் கூட**
தேவையான அளவே உபயோகியுங்கள் அதில் வீணுகப்போவது எதுவுமில்லை




**NESCAFÉ***
நெஸ்லே தயாரிப்பு

## தனிச்சிறப்புள்ள தரமான காபி

நெஸ்காஃபே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும்.

NCE 1088 TA11-A1

பாவனை செய்து கொண்டிருந்தாரே........ அதெல்லாம் என்ன ?''

''கதையின் முக்கிய கட்டமே அதுதான்! அந்தப் புத்தகங்கள் அத்தனையும் பஞ்சாங்கங்கள். அப்பாவுக்கு ஜாதகத்தில் ரொம்ப நம்பிக்கை! உன்னுடைய பிறந்த தேதியைக் கூட நைசாகக் கண்டு பிடித்து ஜாதகம் கணித்து விட்டாரே ! நம் ஜாதகங்கள் பிரமாதமாகப் பொருந்துகின்றனவாம்! எங்கே எல்லாம் கைகூடினபின் பாழாய்ப் போன கிரகங்கள் காலை வாரி விட்டுவிடுமோ என்று நடுங்கிக் கொண்டிருந்தேன்.....''

''அப்படியா சேதி ? நான் அவரிடம் சொன்னது என் பிறந்த தேதி இல்லையே ! ஏதோ வாய்க்கு வந்ததையல்லவா உளறித் தொலைத்தேன்?....''

''உஸ் !. வெளியே மூச்சு விட்டு விடாதே! எதற்கும் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. இப்பொழுதே உனக்குப் பலமாக வாய்ப் பூட்டுப் போட்டு விடுகிறேன்....'' என்று கூறி ராஜத்தை நெருங்கினான் கிருஷ்ணன்.

('இன்னும் ஏன் எல்லோரும் வாயைப் பிளந்தபடி உட்கார்ந்திருக்கிறீர்கள் ? திரை விழுந்தாகி விட்டது! எல்லோரும் அடுத்த வாரம் நடக்கவிருக்கும் கல்யாணத்துக்கு நாலு நாள் முன்னதாகவே.....'

'ஸார்' சொன்னது கதை முடிந்து விட்டதென்று? கதையின் முடிவிலே ஏதாவது திருப்பம் இருக்க வேண்டாமா? நிஜ வாழ்வில் என்ன நடந்ததோ நான் அறியேன்! கதாசிரியை என்ற முறையில் நான் கதையை இப்படித்தான் முடிப்பேன்' என்று கூறிப் பேசத்தொடங்கினாள் செங்கமலம்.)

''என்ன ஸார், பெண் எப்படி இருக்கிறாள் ?'' என்று சரபோஜியை வினவினார் 'மன்'.

''இலட்சிய நாட்டுப் பெண் போங்கள்! நல்ல குணம். பிளாரன்ஸ் நைட்டிங்கேல் இவளிடம் பிச்சை வாங்க வேண்டியது தான் !''

''ஆனால் ஜாதகம் பொருந்துகிறதா ? உங்களுக்கு அது ரொம்ப முக்கியமாச்சே!''

''உங்களிடம் இரகசியமாகச் சொல்லுகிறேன்; வெளியே மூச்சு விட்டுவிடாதீர்கள். அவளுடைய பிறந்த தேதியைத் தெரிந்துகொண்டு ஜாதகம் கணித்ததென்னவோ உண்மை. ஆனால் நான் பொருத்தம் பார்க்கவே இல்லை! எங்கே கிரகங்கள் முட்டுக்கட்டை போட்டுத் தொலைத்து, இவ்வளவு பண்புள்ள பெண்ணை இழக்க நேரிடுமோ என்ற அச்சம்தான் காரணம்.... மனப்பொருத்தம் இருக்கே.... அதுவே போதும் என்று விட்டு விட்டேன் !''

## ஓரணாவுக்கு ஒரு வழக்கு

வீரமுத்து படையாச்சி ஒரு குதிரையைச் சொக்கநாதனுக்கு விற்றான். சில நாட்கள் கழித்துச் சொக்கநாதன் ஓர் ஆளிடம் குதிரையின் கிரயமான ரூ. 200 கொடுத்து அனுப்பினான். அத்துடன் வீரமுத்துவிடமிருந்து குதிரையின் சேணம், அங்குபடி முதலானவற்றை வாங்கி வரும்படி ஆளிடம் சொல்லி அனுப்பினான். விவரம் அறிந்த வீரமுத்து சொக்கநாதனுக்குக் கடிதம் எழுதி அந்த ஆளிடம் கொடுத்து அனுப்பினான். அந்தக் கடிதத்தில் ''குதிரையின் கிரயமான ரூ. 200 பெற்றுக் கொண்டேன். சேணம் முதலானவற்றுக்கு அவற்றின் விலையைக் கொடுத்துவிட்டு எடுத்துச் செல்லவும்'' என்று எழுதியிருந்தான்.

சொக்கநாதனுக்கு ஒரே கோபம். சேணத்துக்குத் தனியாகப் பணம் தருவதா என்ற கோபம்தான். அவன் ரெவின்யூ ஆபீசில் போய் வீரமுத்து ரூ. 200க்கு ரசீது தந்திருப்பதாகவும் ஆனால் அதில் சட்டப்படி ஓரணா ரெவின்யூ ஸ்டாம்பு ஒட்டவில்லை என்றும் புகார் செய்தான். ரெவின்யூ இலாக்கா வீரமுத்துமீது வழக்குத் தொடுத்தது.

வீரமுத்து தான் ரசீது தரவில்லை என்றும் கடிதமே எழுதியதாகவும் அதனால் ரெவின்யூ ஸ்டாம்பு ஒட்டாதது குற்றமில்லை என்றும் வாதாடினான்.

நீங்கள் நீதிபதியாக இருந்தால் என்ன தீர்ப்பு அளிப்பீர்கள் ?

—வி. எஸ். ஸுக்டண்கர்

விடை: ஜஸ்டிஸ் முத்துசாமி ஐயர் உள்ளடங்கிய ஐந்து நீதிபதிகள் அளித்த தீர்ப்பு இது:

வீரமுத்து எழுதியது கடிதமே. கடிதத்தினை ரசீதாகக் கருத முடியாது. ஆகவே அதில் ரெவின்யூ ஸ்டாம்பு ஒட்டாதது குற்றமில்லை.

# மற்றவர்களை விட முன்னாலிருக்க வழி...

எதிர்காலத்திலும் இவளை முன்னாலிருக்கச் செய்யுங்கள். பணவசதி குறைவுகாரணமாக வாழ்க்கையில் இவள் முன்னேறுவது தடைப்படாமலிருக்க, இவளுக்கென்று தவறாமல் பணம் சேமித்து வாருங்கள்.

யூகோ பாங்கில் சேமியுங்கள், உங்கள் பணம் பெருகி, உங்களுடைய அன்புக்குழந்தைகளின் இன்பகரமான எதிர் காலத்திற்கு உத்தரவாதம் அளிக்கும். நீங்கள் சிறு தொகையான ரூ 5/- க்கு யூகோ பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்க முடியும்.






தலைமை ஆபீஸ், கல்கத்தா

நீங்கள் பணம் சேமிக்கலாம், யுகோ பாங்க் உங்களுக்கு உதவி செய்ய முடியும்.

# படாதிபதிகளே கேளுங்கள்!



தமிழ்ப் படாதிபதிகளே! உங்களுக்கு ஒரு நல்ல யோசனை! யோசனைகளை வரவேற்கும் வழக்கம் உங்களுக்கில்லை என்பது தெரிந்தும், நான் யோசனை கூற முன்வந்திருக்கிறேனே என்று யோசிக்கிறீர்களா? யோசனை வேண்டாம். நான் கூறப் போவது உங்களுக்கு லாபம் தரக் கூடிய யோசனைதான்.

படங்களைத் தயாரிக்கும் செலவு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு போகிறது என்று தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்களே, அதை எப்படிக் குறைப்பது என்று எப்பொழுதாவது எண்ணிப் பார்த்திருக்கிறீர்களா? ஆனால் எண்ணிப் பார்க்கக்கூட ஒழிவில்லாத தங்களைக் குறை கூறிப் பயன் இல்லை என்று தெரிந்துதான் உங்களுக்கு யோசனை கூற நானாகவே முன்வந்திருக்கிறேன்.

நான் நிறையத் தமிழ்ப் படங்கள் பார்த்துள்ளேன். அவற்றிலிருந்து ஒரு விஷயம் தெரிந்து கொண்டேன். அது என்னவென்றால், நான் கீழே குறிப்பிடப் போகும் மூன்று அம்சங்கள் எல்லாத் தமிழ்ப் படங்களுக்கும் பொது. அவை இல்லாத தமிழ்ப் படங்களே கிடையாது. அவை இல்லையென்றால், அந்தப் படங்களைத் தமிழ்ப் படங்களின் எண்ணிக்கையிலேயே சேர்க்க யோக்கியதை இல்லை என்பதுதான்.

அந்த மூன்று அம்சங்கள் என்ன என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். ஏனெனில் கதைக்குப் பொருத்தமோ, இல்லையோ, இந்த மூன்று அம்சங்களும் இருந்தால்தான் படம் வெற்றிகரமாக ஓடும் என்று எல்லாப் படாதிபதிகளும் தங்கள் படங்களில் இந்த மூன்று அம்சங்களையும் வெகு சிரமப்பட்டுத் திணிக்கிறார்கள். இந்தத் திணிப்பில் தமிழ்ப் படாதிபதிகள் காட்டும் சாமர்த்தியத்தை இந்தித் திணிப்பாளர்கள்கூட மெச்சுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அந்த மூன்று என்ன தெரியுமா ?

1. முக்காலே அரைக்கால் நிர்வாண நடனங்கள்.
2. குத்துச் சண்டைகள்.
3. ஒரு மோட்டார் வண்டியை இன்னொரு மோட்டார் வண்டி துரத்தும் காட்சிகள்.

முக்காலே அரைக்கால் நிர்வாண நடனங்கள் இல்லாத தமிழ்ப் படங்கள் இல்லையென்றே சொல்லலாம். இடையே திடீரென்று கதாநாயகன், ''நாளைக்கு என் பிறந்த நாள். ஒரு பார்ட்டி கொடுக்கப் போகிறேன்'' என்பான். அவ்வளவுதான்; பார்ட்டி என்றதும் முக்காலே அரைக்கால் நிர்வாண நடனம் ஆரம்பமாகப்





போகிறது என்பது கொட்டகையில் உள்ள எல்லாருக்கும் தெரியும். உடனே கண்ணை மூடிக் கொள்கிறவர்கள் கண்ணை மூடிக்கொள்வார்கள், வெளியே போகிறவர்கள் போவார்கள், பார்க்கிறவர்கள் பார்ப்பார்கள்.

அதைப் போல் கதாநாயகனும், வில்லனும் சந்திக்கும்போதெல்லாம் ஒரு குத்துச் சண்டை நடக்கும். ஒருவரையொருவர் குத்துவார்கள், ஒருவரைத் தூக்கி ஒருவர் எறிவார்கள், நாற்காலி மேஜைகளை உடைப்பார்கள். இருந்தும் இருவருக்கும் உடலில் ஓர் ஊனமும் ஏற்படாது. அவர்களுடைய உடையும் கசங்காது. அத்தனை அழகாக அவர்கள் குத்துச் சண்டை போடுவார்கள்.

மூன்றாவதாக, ஒவ்வொரு தமிழ்ப் படத்திலும் கட்டாயம் இருந்துதான் ஆக வேண்டிய அம்சம். ஒரு காரை இன்னொரு கார் துரத்துவது. கதை முடியும் சமயத்தில் ஒரு காரை இன்னொரு கார் துரத்தித்தான் ஆக வேண்டும் என்று சம்பிரதாயமே ஏற்பட்டு விட்டது. கதாநாயகியை ஒரு காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு வில்லன் ஓடுவான். அந்தக் காரைக் கதாநாயகன் இன்னொரு காரில் பின்தொடர்ந்து பிடிக்க வேண்டும். ஆனால் அவசரப்பட்டு உடனேயே பிடித்துவிடக் கூடாது. முதல் கார் வெகு தூரம் சென்ற பிறகுதான் பிடிக்க வேண்டும்.

ஆக, இந்த மூன்று அம்சங்களையும் சேர்க்க வேண்டும் என்பதற்காக, ஒவ்வொரு படாதிபதியும் பணத்தைச் செலவழித்து, இந்தக் காட்சிகளைத் தங்கள் நடிகர்களைக் கொண்டு நடிக்கச் சொல்லி, படம் பிடிக்கிறார்கள்.

ரசிகர்களுக்கு ஒரே மாதிரியாகத் தோற்றம் அளிக்கும் இக்காட்சிகளை எல்லாப் படாதிபதிகளும் தனித் தனியாகப் பணம் செலவழித்துப் படம் பிடிப்பானேன்?

யுத்தக் காட்சிகள், விமானக் காட்சிகள், காட்டு மிருகங்களின் காட்சிகள் முதலியவற்றை இரவலாகக் கொடுப்பதற்கென்றே மேனாடுகளில் சில கம்பெனிகள் உள்ளன. சில படங்களில் கதாநாயகியின்மீது சிங்கம் பாய வருவது போன்ற சில காட்சிகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். இதில் கதாநாயகி நடுங்குவது போலக் காட்டப்படும் காட்சி சொந்தச் சரக்கு. ஆனால் சிங்கம் பாய்வது போல் உள்ள காட்சி இரவல் சரக்கு. இந்த இரண்டு காட்சிகளும் அடுத்தடுத்துக் காட்டப்படுவதால் நாம் சிங்கம் கதாநாயகியின் மீது பாயப் போகிறது என்று கலங்குகிறோம். ஆனால் நீங்கள் கவனித்துப் பார்த்தால் இருவரும் ஒரே காட்சியில் சேர்ந்து காணப்படமாட்டார்கள்.

இது மாதிரி சிங்கக் காட்சிகளை இரவல் வாங்கிச் சேர்ப்பது போல, ஆபாச நடனக் காட்சிகள், குத்துச் சண்டைக் காட்சிகள், காரைக் கார் துரத்தும் காட்சிகள் — இவற்றை யாராவது ஒருவர் பிடித்தால் போதுமே! எதற்காக எல்லாப் படாதிபதிகளும் தனித்தனியாகப் பணத்தைச் செலவழிக்க வேண்டும்? ஒரு கவர்ச்சி நடனத்தைப் படம் பிடித்து விட்டால் அதையே எல்லாப் படங்களிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒரு படத்தில் ஒரு பார்ட்டியில் டான்ஸ் ஆடுகிறவளே இன்னொரு படத்தில் இன்னொரு பார்ட்டியில் டான்ஸ் ஆடுவதைக் குற்றம் என்று யாரும் சொல்ல முடியாது.

இப்போது தமிழ் சினிமாக்களில் ஆடப்படும் நடனங்கள் எல்லாம் ஒரே மாதிரியான அவலட்சண நடனங்கள்தான். வித்தியாசம் ஒன்றும் கிடையாது. ஆகவே, யாரேனும் இது இரவல் காட்சி என்று கண்டுபிடித்து விடுவார்களோ என்ற பிரச்னைக்கு இடமில்லை.

இதைப் போலவே குத்துச் சண்டைகளையும் படத்துக்குப் படம் பணம் செலவழித்து எடுக்க வேண்டாம். படத்துக்குப் படம் கதாநாயகனும், வில்லனும் மாறுகிறார்களே, அப்படியிருக்க எப்படி ஒரே குத்துச் சண்டையையே எல்லாப் படங்களிலும் காட்ட முடியும் என்று நீங்கள் கேட்கலாம்.

கதாநாயகனும் வில்லனும் குத்துச் சண்டை போடப் போகிறார்கள். அப்பொழுது வில்லன் சொல்கிறான்: ''டேய்! நீ என்னோடு சண்டை போடுவது இருக்கட்டும். என் நண்பன் ஒருவன் இருக்கிறான். முதலில் அவனைத் தோல்வியடையச் செய்து காட்டு, பார்க்கலாம்'' என்கிறான்.

அதற்குக் கதாநாயகன், ''உன் நண்பனைத் தோல்வியடையச் செய்ய நான் தேவையில்லை. என் நண்பன் இருக்கிறான். அவன் போதும்'' என்கிறான்.

உடனே இரண்டு நண்பர்களும் குத்துச் சண்டை போட ஆரம்பிப்பார்கள். இந்த இரண்டு நண்பர்களும், எல்லாக் கதாநாயகர்களுக்கும், வில்லன்களுக்கும் நண்பர்களாக இருக்கக் கூடாது என்று ஏதாவது சட்டம் இருக்கிறதா?

இந்தச் சமயத்தில் இன்னொரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. கதாநாயகனுக்கும், கதாநாயகிக்கும் காதல் ஏற்பட்டதும், அவர்கள், ''வேங்கட்ராமா, 'கோவிந்தா', போடுவது போலத் தரையில் உருண்டு புரள்கிறார்களே அல்லது ஓடிப் பிடித்து விளையாடுகிறார்களே, இவற்றையும் யாராவது ஒரு படாதிபதி, ''ஸ்டாக் ஷாட்''டாக எடுத்து வைத்துக் கொண்டு, மற்றவர்களுக்கு விநியோகித்தால் போதும். ஒவ்வொரு படத்திலும் கதாநாயகனும், கதாநாயகியும்தான் உருண்டு புரள வேண்டும் என்று வைத்துக் கொள்ள வேண்டியதில்லை.

இதற்கும் ஒரு சின்ன வசனம் சேர்த்து விட்டால் போயிற்று!

கார் துரத்தும் காட்சியையும் ஒவ்வொரு படாதிபதியும் பணம் செலவழித்துப் படம் பிடிக்க வேண்டும் என்பது அவசியமில்லை என்பதை நீங்களே ஒப்புக் கொள்வீர்கள்.

ஆக, இது மாதிரியே பல காட்சிகள் எல்லாப் படங்களிலும் ஒன்றாக இருப்பதால் குறிப்பிட்ட சில நடிக, நடிகைகளே எல்லாப் படங்களிலும் நடிப்பதால், ஒரு தமிழ்ப் படத்துக்கும், இன்னொரு தமிழ்ப் படத்துக்கும் வித்தியாசமே தெரிவதில்லை. ஆதலால்... அடடே! படாதிபதிகள் பணத்தைச் சிக்கனப்படுத்த வெகு நல்ல வழியொன்று இருக்கையில், நான் என்னென்னவோ சொல்லிக் கொண்டு போகிறேனே! ஒரு படத்தையே பல பெயர்களில் படாதிபதிகள் வெளியிட்டாலும் நமக்கு வித்தியாசமே தெரியாதே!

# புதியது !

## தலைவலியைப் போக்க உபரி வலிமையுள்ள வலிநிவாரணி

# பவரின்



**பவரின் டாப்யூல்ஸ்* வலியை முறியடிக்கிறது.**

தலைவலி, தசை வலி, பல் வலி,
ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றால்
ஏற்படும் அவதிகளைச் சக்தியுடன்
அபாயமற்ற முறையில் எதிர்க்கிறது.

*விழுங்க எளிதான ஓர் காப்ஸ்யூல் வடிவ வில்லை.
ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்: ஜெஃப்ரி மானேர்ஸ்
& கம்பெனி லிட்.

EXTRA-STRENGTH
**POWERIN**
ANALGESIC Tabules

PW-5-152 TM



# பாசம் பந்தும்

**கே. ஜெயலக்ஷ்மி**

மூலையோடு மூலையாக நத்தை போல் சுருண்டு கிடந்த தன் தாயின் சமீபம் வந்த வனஜா ஒரு கணம் தயங்கி நின்றாள். இதற்குள் வாசற்படியின் அருகில் நிழலாடவே, சடக்கென்று குனிந்து தாயாரின் முகத்தருகில் போய், ''அம்மா ! என் மாமனார் வந்திருக்கிறார்'' என்று கிசுகிசுத்தாள்.

''ம்....'' முனகல்தான் கேட்டதே தவிர, உருவத்தில் சலனம்கூட ஏற்படவில்லை.

''பார்வதி ! அவருக்கு உன்னிடம் ஏதோ சொல்ல வேண்டுமாம்....'' என்றபடியே அருகில் வந்து பார்வதியை உசுப்பினாள் ராஜி, வனஜாவின் அத்தை.

அழுது சிவந்த முகத்தை நிமிர்த்தித் தன் நாத்தனாரின் முகத்தைப் பார்த்தாள் பார்வதி.

''எழுந்து உட்கார்ந்துக்கோ !''

மிகுந்த பிரயாசையுடன் எழுந்து உட்கார்ந்தாள் பார்வதி. காய்ந்திருந்த நீர்க் கோடுகளின் மீது மறுபடியும் கண்ணீர் வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. முதுகின் மேலும் தோள்களின் மேலும் விரிந்து கிடந்த கூந்தலின் சில பகுதி அந்த வெள்ளத்தில் தோய்ந்து முகத்தோடு முகமாக ஒன்றிப் போயிருந்தது. 'என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள் அக்கா ! நீங்களே அவரிடம் பேசி அனுப்பிவிடக் கூடாதா ?' என்பது போல் தன் நாத்தனாரின் முகத்தை நோக்கினாள் அவள்.

வாசற்படியின் அருகிலிருந்து கனைப்புக் குரல் கேட்டது.

பார்வதியை விட்டு நகர்ந்து வாசற்படியின் அருகில் வந்து நின்று கொண்டாள் ராஜி.

ஒன்றும் புரியாமல் சிலையாக நின்றிருந்தாள் வனஜா.

''துக்கத்துக்கு வந்துவிட்டுச் சொல்லிக் கொண்டு போகக் கூடாது. மத்தியான வண்டிக்கே கிளம்பியாக வேண்டும். இன்று தேதி இரண்டு. பதினேழாம் தேதி நாள் பார்த்திருக்கிறேன். வனஜாவையும் கோபுவையும் மயிலாப்பூர் வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார் வனஜாவின் மாமனார் வேதகிரி.

''அதைப் பற்றி இப்போதென்ன ? இந்தக் காரியமெல்லாம் ஆகட்டுமே....!'' எப்படியோ சொல்லி விட்டாள் பார்வதி.

''அதற்கும் இதற்கும் என்ன வந்தது ?'' என்றார் வேதகிரி அலட்சியமாக.

''அநாவசியமாக அந்த வீட்டுக்கு வேறு வாடகை கொடுப்பானேன் ? இங்கேயே அவர்களும் இருந்து விட்டால் என்ன ?'' என்று தயக்கத்துடனேயே வினவினாள் ராஜி.

''அப்படியோர் எண்ணம் உங்களுக்கெல்லாம் இருக்கக்கூடும் என்று நான் எதிர் பார்த்துத்தான் முன்கூட்டியே அது சாத்தியப்படாது என்று சொல்ல வந்தேன். எந்தவிதமான பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள என் பிள்ளையால் முடியாது. அவனை மாமியார் வீட்டில் இருக்கவோ, அல்லது அவனுடைய வீட்டில் அவன் மாமியாரை வைத்துக் கொள்ளவோ என்னால் அனுமதிக்க முடியாது.'' அவர் குரலில் கடுமையும் கண்டிப்பும் அளவுக்கு மீறியே தொனித்தன.

''பார்வதியை நீங்கள் ஒரு சுமையாகக் கருதுகிறீர்கள் போலிருக்கிறது.'' பட்டென்று சொன்னாள் ராஜி.

''இல்லையென்று யாரும் மறுக்க முடியாதே !''

''நாலு பேர்களை உட்கார வைத்துச் சோறு போட அவளுக்கு இருக்கிறது.''

''மனிதனுக்குப் பந்தமும் ஒரு சுமைதான்.''

''கடமையை யாரும் புறக்கணிக்க முடியாது.''

''இது கடமையே இல்லை என்றால் வேறு பேச்சுக்கு இடம் ஏது?'' உரத்த குரலில் மொழிந்தார் வேதகிரி.

'' அக்கா ! தயவுசெய்து நீங்கள் பேசாமலிருங்கள். அவருக்கு எப்படி விருப்பமோ அப்படி நடந்து கொள்ளலாம். அதற்கு ஒரு போதும் நான் குறுக்கே நிற்க மாட்டேன் என்று சொல்லி விடுங்கள்'' என்று கூறி விட்டுக் குப்புறப் படுத்துக் கொண்டு விட்டாள் பார்வதி.

இந்தப் பதிலுக்காகவே காத்திருந்தவர் போல் உடனே அந்த இடத்தை விட்டுச் சென்று விட்டார் வேதகிரி.

''இப்படியும் ஒரு கல் நெஞ்சமா ?'' என்று அங்கலாய்த்தவாறே பார்வதியின் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டாள் ராஜி.

''க்கும்....'' வனஜாவிடமிருந்து விம்மல் ஒலி கேட்டது.

''அழுகிறாயா என்ன வனஜா?'' அண்ணன் மகளை அன்புடன் நோக்கிய ராஜி, ''புக்ககத்து மனிதர்கள் இப்படித்தான் பேசுவார்கள். தைரியமாக இருக்க வேண்டும். இப்படி வந்து உட்கார்ந்து கொள். வா !'' என்று ஆதரவுடன் விளித்தாள்.

'' இப்படிச் சொல்கிறீரே அத்தை. எனக்கு எப்படியோ இருக்கிறது '' என்றவாறே அத்தையிடம் வந்து அமர்ந்தாள் வனஜா.

''அவரும் பெண்ணை — பிள்ளையைப் பெற்றவர்தான். யோசிக்காமல் பேசிவிட்டார். போகட்டும். மாப்பிள்ளை நல்ல மாதிரி.'' ஆறுதலாகப் பேசினாள் ராஜி.

''விட்டுத் தள்ளுங்கள் அக்கா. அவர் கவலை அவருக்கு.'' மெல்லிய குரலில் கூறினாள் பார்வதி.

''கவலையா...?'' புரியவில்லை ராஜிக்கு. ஏன், வனஜாவுக்கும்கூடத்தான.

# செய்யும்




''இருக்காதா? பின்னே கையை விட்டு நழுவி விடுவாளோ என்றிருக்காதா?''

''நழுவுவானேன்? இந்தப் பக்கத்திலும் அவனுக்குக் கடமை இல்லையா?''

'அதுதான் இல்லை என்று சொல்லிவிட்டாரே!''

''அதெப்படி இல்லாமல் போகும்?''

''இல்லாமல் போய் விடவில்லை. இருப்பதை ஏற்றுக் கொள்ள அவர் மறுக்கிறார். அவ்வளவுதான்.''

''இதைக் கல்யாணத்துக்கு முன்பே யோசித்திருக்க வேண்டும். இப்போது மறுப்பது சரியல்ல...''

''இதை அவருக்கு யார் சொல்ல முடியும்? இருக்கிற துன்பம் போதாது என்று இது வேறு...'' பார்வதியின் குரல் துயரத்தின் மிகுதியால் தடைப்பட்டது.

''இந்தச் சமயத்தில் அம்மாவைத் தனியாக விட்டு விட்டு நான் எப்படி அந்த வீட்டுக்குப் போக முடியும் அத்தை? முடியாது. அதுஎன்றும் முடியவே முடியாது'' என்று ஆற்றினாள் மைதுரா.

''இப்படி என்னை எல்லோருக்கும் ஒரு பிரச்னைப் பொருளாக்கி விட்டு நீங்கள் போய் விட்டீர்களே! ஐயோ! இது என்ன கொடுமை!'' என்று தலையில் அடித்துக் கொண்டு அழுதாள் பார்வதி.

''அழாதே அம்மா, அழாதே!'' தாயாரின் கைகளைப் பற்றிக் கொண்டு அழுதாள் வனஜா.

''வனஜா!'' அறைக்கு வெளியே இருந்து குரல் கேட்டது.

''மாப்பிள்ளை கூப்பிடுகிறார். நீ போ, வனஜா!'' என்றான் ராஜி.

கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்தாள் வனஜா.

''எதற்காக இத்தனை ஆர்ப்பாட்டம்? அப்பா அப்படிச் சொன்னதற்காகத்தானே?''

''அது என்ன சாமான்யமான வார்த்தையா?'' அவளால் அழுகையை அடக்க முடியவில்லை. பரிதாபமாகக் கணவனைப் பார்த்தாள் வனஜா.

''என் தகப்பனார் கிளப்பிய பிரச்னை என் சம்பந்தப்பட்ட பிரச்னை. அதை என்னிடமே விட்டு விடுங்கள் எல்லோரும். வீணாக இதைப் பெரிதுபடுத்த வேண்டாம். கண்களைத் துடைத்துக் கொண்டு எனக்குக் கொஞ்சம் ரூபாய் வேண்டியிருக்கிறது. போய் எடுத்துக் கொண்டு வா.'' கண்டிப்பும் கனிவும் நிறைந்த குரலில் உத்தரவிட்டான் கோபு.

வியப்பினால் மலைத்துப் போய் நின்றாள் அந்த அப்பாவிப் பெண்.

''ஏன் நிற்கிறாய் வனஜா? நான் இது போன்ற எல்லாவற்றையும் எதிர்பார்த்துத்தான் உன்னை மணந்து கொண்டேன். நீ உன் பெற்றோர்களுக்கு ஒரே பெண் என்பது எனக்குத் தெரியாதா? என்னிடம் உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''சரி.'' கண்களைத் துடைத்துக் கொண்டு அவன் உத்தரவை நிறைவேற்ற விரைந்தாள் வனஜா. அவனுக்குச் சிறப்பாக இரண்டு வார்த்தைகள் பேசி அவனுடைய பெருந்தன்மையைச் சிலாகிக்க அந்தக் குழந்தைப் பெண்ணுக்குத் தெரியவில்லை. அதனாலென்ன? அவன் அவளுடைய கள்ளமற்ற மனத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருந்தான்.

கணவனின் ஆதரவான வார்த்தைகள் வனஜாவுக்குக் கொஞ்சம் ஆறுதலைத் தந்த போதிலும் அவள் உள்ளம் நிம்மதி பெற்று விடவில்லை. அங்கே ஆயிரமாயிரம் சிந்தனைகள் ஆர்ப்பரித்து அட்டகாசம் புரிந்து கொண்டேதான் இருந்தன. அவளுடைய பெற்றோருக்கு அவள் ஒரே புதல்வி. அதனால் தானோ என்னவோ வைத்தீசுவரனும் பார்வதியும் அவள் மீது எல்லையற்ற பாசம் கொண்டிருந்தனர். வைத்தீசுவரனாவது மகளைக் கண்டிக்க வேண்டிய சமயத்தில் கண்டிப்பார். அன்பு காட்ட வேண்டிய சமயத்தில் அன்பு காட்டுவார். பார்வதி அப்படியில்லை. அவளுடைய அன்பு அதீதமானது. ஆவேசமானது. அதில் கண்டிப்பு என்கிற நியாயமான சேர்க்கைகூடக் கிடையாது அவளுக்கு. அவள் தன் அருமை மகளுக்காக எதையும் செய்யத் தயங்காதவள். சுருக்கமாகச் சொல்வதென்றால் பார்வதிக்குத் தன் கணவன்கூட மகளுக்கு அடுத்தபடிதான்.

பார்வதியின் தாய்ப் பாசம் கடலைவிட ஆழமானது; அகலமானது. ஆனால் எல்லையே காணாதது. உலகில் எத்தனை எத்தனை இன்பங்கள் உண்டோ அத்தனை அத்தனை இன்பங்களையும் அப்படி அப்படியே மகளுக்கு வாங்கி வழங்கிவிடத் துடிப்பாள். அதற்காக அவள் உலகத்தையேகூட விலை பேசத் தயங்க மாட்டாள். எல்லாவற்றுக்கும் எல்லை உண்டு. ஆனால் ஆசைக்கு ஓர் எல்லையே கிடையாது என்பார்கள் அல்லவா? அது பார்வதியின் தாயன்புக்குத்தான் முற்றிலும் பொருந்தும். பெண் எல்லாவித இன்பங்களையும் ஆசை தீர அனுபவிக்க வேண்டும். அதைத் தான் கண் குளிரப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பது ஒன்றுதான் பார்வதியின் ஜீவித லட்சியம். மற்றப்படி அவளுக்குச் சமூகத்தின் சட்டதிட்டங்களைப் பற்றியோ சம்பிரதாயங்களைப் பற்றியோ அக்கறை இல்லை. அவைகளையெல்லாம் அவள் எப்போதேனும் கௌரவித்தது உண்டு என்றால் அதன் அடித்தளம் மகள் மீதுள்ள பாசத்தின் காரணமாகவே இருந்திருக்கும்.

இதன் அடிப்படையில்தான் அவள் பெண்ணின் திருமணத்தையும் அவசரம் அவசரமாக முடித்தாள். பெண்ணை மணக்கோலத்தில் பார்க்க விரும்பினாள். பார்த்தும் விட்டாள். அடுத்ததாக மகளும் மருமகனும் ஜோடிப் புறாவைப் போல் கூடி வாழும் கோலாகலக் காட்சியைக் காண விரும்பினாள். அவளுடைய அந்த விருப்பமும் கைகூடி வந்தது. மாப்பிள்ளை கோபுவுக்குச் சென்னைக்கே மாற்றல் கிடைத்தது. வைத்தீசுவரனுக்கு அவ்வளவாக விருப்பமில்லை என்றபோதிலும் பெண்ணையும் மாப்பிள்ளையையும் வீட்டோடு வைத்துக் கொள்ளவே பார்வதி ஆசைப்பட்டாள்.

இந்த இடத்தில் ஒரு முட்டுக்கட்டை விழுந்தது. அது சம்பந்தி வேதகிரியின் உருவில் வந்தது. அவருக்குக் கோபு தலைமகன். அவருடைய குடும்பத்தின் வருங்காலத் தலைவன். அந்த மாபெரும் பதவிக்கு அவனை அவர் தயார் செய்து வந்தார். தம்பிகளின் படிப்பு, தங்கைகளின் திருமணங்கள் — பெற்றோர்களின் பராமரிப்பு என்று அந்தப் பதவிக்குப் பலவிதமான பொறுப்புக்கள் காத்திருந்தன. அதையெல்லாம் விட்டு விட்டுக் கடமை என்கிற பெயரில் மகன் வேட்டகத்தோடு அதிக அளவில் உறவாடத் தொடங்கி விடுவானோ என்று அவர் அஞ்சினார். அந்தக் கடமையே நாளடைவில் அவனுடைய வாழ்வாகி விட்டால்? அப்படிப்பட்ட சம்பவங்கள்தான் தற்போதைய சமூகத்தில் அதிகரித்துப் போய் விட்டனவே! அவர் காரியவாதி. தற்காப்புக்குப் பெயர் பெற்றவர். கேட்க வேண்டுமா? செயலில் இறங்கினார்.

சென்னைக்கு வந்தார். மகனுக்காக மயிலாப்பூரில் ஒரு வீடு பார்த்தார். உடனே மகனையும் மருமகளையும் அதில் தனிக் குடித்தனம் செய்ய வைத்துவிடத் துடித்தார். வைத்தும் விட்டிருப்பார். நடுவில் வந்து குறுக்கிட்டது பாழும் புரட்டாசி மாதம். அந்த மாதத்தில் புதுக் குடித்தனம் வைக்கக் கூடாதாம். அதனால் ஐப்பசி மாதத்தின் முதல் வாரத்தில் ஒரு நல்ல நாள் பார்த்து அன்றைக்குப் புது வீட்டுக்குப்

போய் விடும்படி மகனுக்குக் கண்டிப்பாக உத்தரவு போட்டுவிட்டு ஊருக்குப் போய்ச் சேர்ந்தார் வேதகிரி.

அதிர்ச்சி; ஆச்சரியம்! ஏமாற்றம்! வேதனை எல்லாமாக ஒன்று சேர்ந்து பார்வதியை ஒரே அமுக்காக அமுக்கிவிட்டன. ஒன்றும் புரியாமல் கையைப் பிசைந்து கொண்டு நின்றுள் பாவம்.

"நீ இவ்வளவு தூரம் உன் மனத்தைத் துன்புறுத்திக் கொள்ளக் கூடாது பார்வதி. பெண் குழந்தையைப் பெற்றவர்கள் என்றைக்குமே பிரிவுத் துயரத்தை ஏற்கத் தயாராகவே இருக்க வேண்டும். நீ ஆண் மகவைப் பெற்றிருந்தால் உன் குடும்பத்தை வாழ வைக்க வேறொரு பொற்கொடி வருவாள். நீ பெற்றதோ பெண் மகவு. அதை இல்லை என்று மறுக்க உன் அன்புக்கு உரிமை கிடையாது பார்வதி....." என்று கூறி மனைவியைத் தேற்றினுர் வைத்திகவரன்.

யார் என்ன சொல்லி என்ன பிரயோசனம்! பார்வதியால் தன் அன்பு மகளைப் பிரிந்து வாழ்கிற வாழ்வை வரவேற்கவே முடியவில்லை. அதிகரித்துக் கொண்டே வந்தது. ஏதேனும் அற்புதம் நிகழாதோ, தன் மகள் மணளனுடன் தன்னிடமே இருந்து விட மாட்டாளா என்று அவள் ஏங்கிக் கொண்டிருந்தாள்.

பார்வதி ஓர் அற்புதத்தை எதிர்பார்த்தாள். ஆனல் அது நிகழவில்லை. அதற்கு மாருக ஓர் அனர்த்தமே ஏற்பட்டு விட்டது. ஆம், 'ஹார்ட் அட்டாக்' என்ற இருபதாம் நூற்ருண்டின் புதிய காலன் அந்தக் குடும்பத்தில் பிரவேசித்து வைத்திகவரனின் உடலைத் தீக்கு உணவாக்கி விட்டான்.

நடக்கக் கூடாதது நடந்து விட்டது. அதற்காக வேறு எதுதான் நிற்க முடியும்? பேரானந்தத்தை எதிர்பார்த்தாள் பார்வதி. ஆனந்தமே பறி போய்விட்டது. குதூகலமான குடும்ப வாழ்வுக்கு ஆசைப்பட்டாள். குங்குமமே பறிபோய்விட்டது. வட்டிக்கு வட்டி வாங்கிக் குடும்பத்தை விரிவுபடுத்திக் கொள்ள முற்பட்டாள். முதலே பறிபோய் விட்டது. இது கொடுமை இல்லையோ! ஆசைகளெல்லாம் நிராசைகளாகி, அன்பே துன்பமாகவும் உருவெடுத்து அவளைத் துயரப் படுகுழியில் தள்ளி வேடிக்கை பார்த்தது.

யார்யாரோ துக்கம் விசாரிக்க வந்தார்கள், போனர்கள். அப்படி ஒரே சம்பந்தியான வேதகிரியும் வந்து போயிருக்கக் கூடாதா? துயரத்தால் வெந்து புண்ணுகிவிட்டிருந்த பார்வதியின் உள்ளத்தைத் தம் உரிமை என்ற வேலினல் மேலும் குத்திக் கிளறி விட்டுத்தானு போக வேண்டும்? பெண்ணைப் பெற்றதற்கு இவ்வளவு பெரிய தண்டனையா? பார்வதிக்குச் சிந்திக்கும் சக்தியே போய் விட்டது.

வனஜா தான் சிந்தனையின் வயப்பட்டுச் செய்வதறியாமல் திகைத்தாள். அவள் படித்தவள். அதனுலேயே புக்ககத்தினரிடம் நல்ல பெயர் வாங்க வேண்டுமே என்று மிகவும் கவலையுற்றுள். எந்தப் பாகத்தில் அடித்தாலும் நாய் காலையே நொண்டுவது போல், படித்த பெண்கள் எப்படி யெல்லாம் மரியாதையாக நடந்து கொண்டாலும்



"கைக் கடிகாரத்தை மூன்றுவது மாடியிலிருந்து தவறிக் கீழே போட்டு விட்டேன். என் தப்புத்தான்..."

"நீங்க கீழே போட்டது தப்பில்லே. அதைப் பொறுக்கி எடுத்து வந்ததுதான் தப்பு!"

பட்டதாரி என்கிற ஒரு காரணத்தினுலேயே குற்றம் காணும் இயல்புள்ள புக்ககத்தினரிடையே நாம் எப்படிப் பாராட்டுப் பெறுவோமோ என்று அவள் அஞ்சினள். இருப்பினும் அவள் அதற்காகத் தன் லட்சியத்தில் பிறழ்ந்துவிட விரும்பவில்லை. அதனுலேயே அவள் இப்போது அதிகம் வருந்தினள்.

"இந்தா, வனஜா! பீரோவில் வை" என்று கூறி ரூபாய் நோட்டுக்களை மனைவியிடம் கொடுத்தான் கோபு.

"இன்னும் முதல் தேதி வரவில்லையே! ஏது இவ்வளவு பணம்?" என்று வியப்புடன் வினவினள் வனஜா.

"மயிலாப்பூர் வீட்டுக்குக் கொடுத்திருந்த அட்வான்ஸ் பணத்தைத் திருப்பி வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்" — சர்வ சாதாரணமாக இதைச் சொன்னுன் அவன்.

தூக்கி வாரிப்போட்டது அவளுக்கு.

"அப்பா கோபித்துக்கொண்டுவிட்டால்?"

"ஓடிவருவார். வசைமாரி பொழிவார், அல்லது காரத்தின் சாரத்தைக் கடிதத்திலேயே வைத்து அனுப்புவார். வேறு என்ன செய்ய முடியும்?"

"ஐயையோ! எனக்குப் பயமாக இருக்கிறது." அவளுக்குக் கண்கள் குளமாயின.

"அப்படியானல் வா, மயிலாப்பூர் வீட்டுக்குப் போய்விடுவோம்."

"அம்மாவை விட்டுவிட்டா?..." குழந்தை மாதிரி கேட்டாள் வனஜா.

"அம்மாவையும் அழைத்துக் கொண்டு தான் வாயேன்."

"இந்த வீட்டை விட அந்த வீட்டுக்கு வாடகை அதிகம். வசதிக் குறைவு."

"அதனுல்தான் அங்கே போகவில்லை."

"கல்யாணமாகி நான்கு மாதங்கள்தான் ஆகின்றன. அதற்குள் அப்பாவுக்கும் பிள்ளைக்கும் மனக் கசப்பு; அதற்குக் காரணம்?"



''நீதான். நீ இல்லாவிட்டால் இந்தக் கல்யாணமே நடந்திருக்காது. கல்யாணம் நடந்திருக்காவிட்டால் இந்தப் பிரச்னையே எழும்பியிருக்காது.''

''அவர்களிடம் நல்ல பெயர் எடுக்க ஆசைப் பட்டேன்.'' — விம்மல்.

''நியாயம்தான். அந்த ஆசை அவர்களுக்கும் இருக்க வேண்டாமா? தோசைக்கு ஒருபுறம் வெந்தால் போதும் என்கிறார் அப்பா. இருபுறமும் வேக வேண்டும் என்கிறேன் நான்.''

''எனக்காக நீங்கள் அவர்களைப் பகைத்துக்கொள்வதா?''

''வேறு வழியில்லையே. ஆனால் பாசத்தின் சக்தி மகத்தானது. காலத்தின் துணையினால் பகை அழியும். பாசம் பரிணமிக்கும், வனஜா! பயப்படாதே! இதெல்லாம் சகஜம் தான். வீட்டுக்கு வீடு வாசற்படி உண்டு.''

வியப்பினால் மலைத்துப் போய் நின்றாள் வனஜா. மணம் முடித்து இந்தக் குறுகிய காலத்தில் இப்படி ஒரு பிரச்னை அவளுக்கு ஏன் ஏற்பட வேண்டும்? நன்றாக இருந்த அப்பா திடீரென்று இறந்து போவானேன்? எல்லோருக்கும் நல்லவளாக நடந்துகொள்ள வேண்டும் என்ற அவளுடைய ஆசைக்கு ஆரம்பக் கட்டத்திலேயே இப்படி ஒரு முடிவா? 'மனிதன் குற்றவாளியாகவே பிறப்பதில்லை. சந்தர்ப்பங்கள்தான் அவனைக் குற்றவாளியாக்குகின்றன' என்கிறார்கள். அது உண்மைதான். நல்லவளாக நடந்து கொள்ள எண்ணும் அவளை இப்போதைய சந்தர்ப்பங்கள்தாமே குற்றவாளியாக்குகின்றன. அவளுடைய மாமனார் மட்டும் கொஞ்சம் பெருந்தன்மையோடு நடந்துகொண்டிருந்தால் எல்லாமே நல்லபடியாக நடக்கும். ஆனால் அவர் அப்படி நடந்து கொள்ளவில்லையே! மாபெரும் இழப்பினால் அருகிலிருக்கக் கடமைப்பட்ட மகனையும் பிரித்து வைக்க விரும்புகிறாரே, அவர்! இது நியாயமா?

''வனஜா! வனஜா!'' உள்ளேயிருந்து பார்வதியின் குரல் கேட்டது.

''என்னம்மா....?'' தாயாரிடம் ஓடி வந்தாள் வனஜா.

''எழும்பூருக்குப் போக வேண்டும். ஒரு டாக்சி பார்த்துக் கொண்டு வரச் சொல்லு..''

''யார் அம்மா ஊருக்குப் போகப் போகிறார்கள்?''

''நான்தான்.''

''அம்மா! என்ன சொல்கிறாய் நீ?'' பதறினாள் வனஜா.

''நான் நம்ம கிராமத்துக்கே போய்விடுவது என்று தீர்மானித்து விட்டேன்.'' சலனமற்ற குரலில் மொழிந்தாள் பார்வதி.

''என்னை விட்டுப் பிரிந்து?''

''ம்....''

''தனியாகவா இருக்கப் போகிறாய்?''

''என் துணை என்னை விட்டு விட்டுப் போய் இன்றைக்கு இருபது நாட்களாகி விட்டன வனஜா.'' விரக்தி பாவம் மேலோங்கி நிற்கிறது பார்வதியின் பேச்சில்.

''ஏனம்மா இப்படிச் சொல்கிறாய்? உனக்குத் துணையாக நான் இருக்கிறேன் அம்மா. மாப்பிள்ளை மயிலாப்பூர் வீட்டுக்குக் கொடுத்திருந்த அட்வான்ஸைத் திருப்பி வாங்கிக் கொண்டு வந்து விட்டார். நீ கிராமத்துக்குப் போகக் கூடாதும்மா, போகக் கூடாது. இங்கேதான் இருக்க வேண்டும். உன்னால் என்னை விட்டுப் பிரிந்திருக்கவே முடியாதும்மா. தயவு செய்து நான் சொல்வதைக் கேள்.'' கண்களில் கண்ணீர் மல்கக் கெஞ்சினாள் வனஜா.

''இதுவரையில் நானும் அப்படித்தான் எண்ணிக் கொண்டிருந்தேன் வனஜா. இப்போதுதான் நான் வாழ்வின் உண்மையை உணர்கிறேன். நான் கிராமத்தில் போய் இருப்பதுதான் சரி. நான் போய் வருகிறேன். என்னைத் தடுக்காதே.''

''அம்மா! உன்னால் தனியாக இருக்க முடியாது.''

''முடியுமோ முடியாதோ! இருந்துதான் ஆகவேண்டும்.''

''ஏனம்மா இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறாய்?'' அழாக் குறையாகக் கேட்கிறாள்.

''ஜோடி பிரிந்து விட்டது வனஜா. இனிமேல் நான் தனியள்தான். நான் யாருக்கும் பிரச்னைப் பொருளாக இருக்க விரும்பவில்லை. அப்படிப்பட்ட நிலையில் உன் அப்பா என்னை வைத்துவிட்டுப் போகவில்லை. அவர் பிறந்த வீடும், அவரை வளர்த்த பூமியும் என்னையும் காப்பாற்றும்.''

''அப்படியானால் என்மீது உனக்குள்ள அன்பு வற்றி விட்டதாம்மா?'' ஆற்றாமையோடு வினவினாள் வனஜா.

''இல்லை. தாயன்பு அப்படிப்பட்டதல்ல. சமூகத்தின் கண்களுக்கு நீ எல்லாவிதத்திலும் சிறப்பாக வாழ வேண்டும் வனஜா. அதற்கு என் அன்பு ஒருபோதும் தடையாக இருக்கக் கூடாது. உன்னைப் பொல்லாத மருமகள் என்று பெயர் எடுக்க என் அன்பு காரணமாவதை என்னால் எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்? முடியவே முடியாது. போம்மா! போய் டாக்சியை அழைத்துவா'' என்று கட்டளையிட்டாள் பார்வதி.

அவளுடைய தாய்ப் பாசம் அதீதமானதுதான். அதனால்தான் அது தன்னையே அழித்துக் கொள்ள முடிகிறது. பிரிவு துயரம் தரும்தான். அதென்ன பிரமாதம்! பாசம் அதையும் விட மேலானதைக் கூடத் தாங்கிக்கொள்ளும். அது பார்வதியின் தாய்ப் பாசமாக்கும்!

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetpet, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No M 4392
Registered as a Newspaper in Ceylon

'வைபோக வனப்பை
எனக்கு வாரிவழங்குவது
புதிய லக்ஸ்'

என்கிறார் சினிமா நட்சத்திரம்
காஞ்சனா

உயர்தரப் புதுமணமும் சர்வதேசப்
புதுமைக் கோலமும்
பூண்டது புதிய லக்ஸ்.
நீங்களே கண்டுகொள்ளுங்கள்...




**வைபோகமான வனப்புக்கு ஓரே ஒரு சோப்: லக்ஸ்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு